ஓம் சரவணபவ

# தமிழ் வேதம்



கர வருடம், தைத் திங்கள்,
18ம் நாள், புதன்கிழமை
தை கிருத்திகை (01.02.2012)




அழகன் அடியார்கள் அறக்கட்டளை
பதிவு எண்: 65/2012
76, சிவசுப்ரமண்ய சுவாமி கோயில் வீதி,
சைதாப்பேட்டை, சென்னை – 15.
அலைபேசி: 98407 18800

இம்மலர் கிடைக்கும் இடம் :

திருமதி. விஜயலட்சுமி கனகராஜ்,
விஜய் ஆப்டிகல்ஸ்,
114, பஜார் வீதி,
சைதாப்பேட்டை, சென்னை–15.
தொலைபேசி : 2434 0895.

திருமதி. சரோஜா காளத்தி,
எண். 76/55, சிவசுப்ரமண்ய சுவாமி கோயில் வீதி,
சைதாப்பேட்டை, சென்னை–15.
தொலைபேசி : 2381 3710.

அழகன் அடியார்கள் அறக்கட்டளை,
பதிவு எண்: 65/2012,
சைதாப்பேட்டை, சென்னை–15.
அலைபேசி: 98407 18800.

மலரை அச்சிட்டோர் :

பிரபு பிரிண்டிங் அவுஸ்
எண். 85/6, ஜீனீஸ் வீதி,
சைதாப்பேட்டை, சென்னை–15.
அலைபேசி: 98412 26545

# முன்னுரை

*அடியவர் இச்சையில் எவை எவை உற்றன*
*அவை தருவித்தருள் பெருமாளே!*

அன்பிற்கினிய அடியீர்,

அழகனின் திருவருளால் ஆண்டிற்கொரு முறை மலரும் "தமிழ் வேதம்" என்ற இம்மலர், இம்முறையும் பல புதிய மந்திர மலர்களுடன் மலர்ந்திருக்கிறது.

சிவத்தை போற்றுவதே சீவத்தில் கொண்ட ஸ்ரீ மாணிக்கவாசகர் அருளிய "போற்றி திருவகவல்" இம்மலரில் கொடுப்பது நாமும் சிவத்தை போற்றவே. இதை தொடர்ந்து படிக்கும் மாணவர்கள் மருத்துவ துறைகளில் சிறந்து விளங்குவதை காணலாம்.

முதல் பாடலின் இறுதி அடியில் இருந்து அடுத்த பாடலின் முதல் அடியை தொடங்கி பாடுவதே அந்தாதி ஆகும். அந்தத்தை (முடிவை) ஆதியாக (முதலாக) கொண்டு பாடும் முறை அந்தாதி என்பதாம். சக்தி வழிபாட்டில் முதன்மையானது அபிராமி அந்தாதி. அப்பாடலுக்கு சற்றும் குறைவிலாது, பல அரிய, பெரிய, பக்தி இரசம் ததும்பும் "அந்தரி அந்தாதி" என்ற சக்தி மிக்க நூறு பாடல்களை அருட்கவி ஸ்ரீ காளிதாசர் இயற்றி அன்னைக்கு அணி செய்வித்திருக்கிறார். அபிராமி அந்தாதியின் ஐந்தாம் பாடலில் "அந்தரி பாதம் என் சென்னியதே" என்றும், எட்டாம் பாடலில் "மகிடன் தலை மேல் அந்தரி"யாக அம்மை ஆவீர்பவிப்பதை அபிராமிபட்டர் நமக்கு கூறுவதன் மூலம் அந்தரி என்பது பராசக்திக்கு உள்ள மற்றொர் பெயர் என்பதை தெளிவுபடுத்தி உள்ளார். மகிடனை போரில் வெற்றி கொண்டு வெற்றிவாகை சூடிய அந்தரியாக இருக்கும் அம்மையை வணங்குவதால் நாமும் வெற்றி பெறலாம் என்பதாலும், இப்பாடலை படிப்பதால் நாமும் வாழ்வியல் கூறுகளில் வெற்றியையும், முடிவில் முக்தி பேறையும் பெறலாம் என்பதால் தான் திருவருள் இப்பாடலுக்கு "அந்தரி அந்தாதி" என பெயர் சூட்டியுள்ளது. இப்பாடலில் கையாளபட்டிருக்கும் பதங்களை படிக்கும் நீங்களே அதில் செறிவூட்டபட்டிருக்கும் சக்தியையும், தத்துவங்களையும் அறிந்து இன்புறலாம்.

முருகனடியார்களில் முதன்மையானவராம் எந்தை ஸ்ரீ அருணகிரிநாதர் பாடிய "அதல சேடனாராட" என தொடங்கும் திருப்புகழ் பாடலின் தோற்றம் மற்றும் பாடலின் பதவுரை கொண்டு அப்பாடலின் அருமை பெருமையும் சக்தியையும் அறியலாம். அப்பாடலின் இறுதியில் ஸ்ரீ அருணகிரிநாதருக்கும் கூடி இருந்த அனைவருக்கும் அருள்மிகு முருகப்பெருமான் அளித்த அக்காட்சியே இம்மலரின் அட்டை படமாக அமைந்து இருப்பதை கண்டு களிப்பேறு அடைவோமாக!

ஐந்து வயது வரை ஊமையாக இருந்து பின்பு திருச்செந்தூர் முருகன் அருளால் பேசும் வல்லமை பெற்று முதல் வார்த்தையே "பூ"வாக ஆரம்பித்து கந்தனின் சரிதத்தையும் பெருமையும் ஆற்றலையும் வார்த்தைகளில் அடங்கா அவன் கருணை திறத்தையும் உலகோர் உய்யும் பொருட்டு "கந்தர் கலிவெண்பா"வாக அருளிய ஸ்ரீ குமர குருபரர் அவன் புகழை பலவாறாக பாடி, பின்பு காசியில் முருகன் ஒருவனையே முதலாக வணங்கும் அடியார்களான

கௌமாரர்களுக்காக "கௌமார மடத்தை" நிறுவினார். இப்பாடலின் 47வது வரியில் "கருணையே உருவாகி உலகத்திற்காக தோன்றிய குருபரன்" என கூறுகிறார். அறியாதார் பலரும் முருகனை புதிதாக பிறந்தவன் என்று கூறுவது பிழையாம். கந்த புராணத்தில் ஸ்ரீ கச்சியப்ப சிவாச்சாரியார் தெளிவுபடுத்தியது போன்று முன்பே 'மறைந்து' இருந்த அருள் வெள்ளம் நம் மீது கொண்ட கருணையால் நமக்காக 'தோன்றி' நமக்கெல்லாம் முன்னின்று குருவாகி அருளும் திறத்தை ஸ்ரீ குமர குருபரரும் இங்கு தெளிவுபடுத்தி உள்ளார். இப்பாடலை பாடுவோர் கந்த புராணம் முழுமையும் பாடிய பலனை அடைவர். முருகனுக்குரிய விரத காலங்களிலும் கந்த புராணம் படிப்போர் எண்ணிலர். அவ்வமயம் இப்பாடலை பாராயணம் செய்து முழுபலனை அடையலாம்.

எந்த காலத்திலும் எந்த சூழலிலும் எத்ததைய பிணியிலிருந்தும் நம்மை காக்கும் மாபெரும் கவசமாம் சண்முக கவசம் இம்மலரின் மகரந்தமாம்.

உலகமெல்லாம் நிறைந்த கந்தனின் ஆலயங்களில் தனிப்பெரும் கருணை பொழிவுடன் கந்தன் திகழும் சைதை, செங்குந்த கோட்டத்துள் எழுந்தருளியிருக்கும் அருள்மிகு சிவசுப்ரமண்ய கருணாமூர்த்தி மேல் கவிமாமணி ஐயாறப்பன் அவர்கள் எழுதிய பாடல்கள் நமக்கு அன்னாரின் கருணையை பெற வழிவகுக்கும் என்பது துணிபு. பொதுவாக அடியார்களை ஆண்டவன் சோதிப்பது அவர்களுக்கும் அவர்களின் மூலம் உலகுக்கும் தமது கருணையை வழங்குவதற்காகவேயாம். அம்முறையிலே கவிமாமணி ஐயாறப்பன் அவர்கள் பெற்ற சோதனை நாம் பெறாமல் இருக்கவும் அவர் மூலம் உலகம் இப்பாடலை பெறவுமேயாம். எனவே அப்பாடல்களை ஓதி திருநீறு அணிந்து நாமும் அப்பிணிகளிலிருந்து விடுபடலாம்.

இன்றைய தினங்களில் ஆண்டவனுக்கு பயப்படுகிறோமோ இல்லையோ, அவர் தம் திருவுளத்தை பூர்த்தி செய்யும் நவகிரகங்களை கண்டு பயப்படுகிறோம். அதிலும் சனீஸ்வரன் என்றால் நமக்கு பிணியும் கிலியும் தான். ஆதலின் அவர் அருளை பெற உதவும் ஒரு பாடலையும் இணைத்துள்ளோம்.

கிருத்திகை தோறும் அடியார்களுக்கு பிரசாதம் வழங்க துணை நிற்கும் திருவருளை போற்றுகிறேன். இம்மலர் கொத்தில் பூத்து குலுங்கும் மந்திரமலர்களை ஆறுமுகனுக்கு ஓதி, அவனுக்கு சூட்டி, அவன் அருளை முழுமையாக பெற அவர் தம் பாதங்களை இறைஞ்சுகின்றேன்.

அழகு முருகனின் அடியார்களை திருவருளால் ஒருவாறு திரட்டி ஆன்மீக நன்னெறியும், சமூக சன்மார்க்கமும் தழைக்க "அழகன் அடியார்கள் அறக்கட்டளை" (பதிவு எண்: 65/2012) என்ற அமைப்பு அவன் அருளாலே உருவாகி உள்ளது. அது தம் பணியை செவ்வனே செய்ய அழகனின் அடிகளை ஆராதிக்கும்

01.02.2012 **அழகன் அடியேன்**
சைதாப்பேட்டை [கா. நமச்சிவாயம்]

# நன்றி!

"**தமிழ் வேதம்**" இலவச வெளியீடாக
தங்கள் கரங்களில் தவழ அருட்தொண்டு புரிந்தவர்கள்

1. திரு. கனகராஜ் மாணிக்கம்
   திருமதி. விஜயலட்சுமி கனகராஜ்
   விஜய் ஆப்டிகல்ஸ், சைதாப்பேட்டை.
2. திரு. காளத்தி – திருமதி. சரோஜா காளத்தி
3. திரு. சிங்காரவேலன் – திருமதி. பத்மாவதி சிங்காரவேலன்
4. திரு. பிரபாகரன் – திருமதி. மகேஸ்வரி பிரபாகரன்
5. திரு. பீதாம்பரம் – திருமதி. கவிதா பீதாம்பரம்
6. திரு. ஹேமாத்திரி – திருமதி. தமிழ்செல்வி ஹேமாத்திரி
7. திரு. மோகன் ராஜு – திருமதி. கீதா மோகன்
8. திரு. பூவண்ணன் – திருமதி. ஹேமாமாலினி பூவண்ணன்
9. திரு. பாஸ்கரன் – திருமதி. சுஜாதா பாஸ்கரன்
10. திரு. குப்பாஜி ராவ் – திருமதி. பத்மாவதி குப்பாஜி
11. திரு. முத்துக்குமார் – திருமதி. பத்மாவதி முத்துக்குமார்
12. திரு. கதிரேசன் – திருமதி. கிரிஜா கதிரேசன்
13. திரு. பொன்னம்பலம் – திருமதி. இலட்சுமி பொன்னம்பலம்
14. திரு. சுரேஷ் ராவ் – திருமதி. ஸ்மிதா சுரேஷ்
15. திரு. பாலசுப்ரமணியன் – திருமதி. இராஜலட்சுமி பாலசுப்ரமணியன்
16. திரு. திருமலை – திருமதி. மீனாட்சி திருமலை
17. திருமதி. பானுமதி
18. திரு. நாராயண் பாலாஜி – திருமதி. சுஜாதா பாலாஜி
19. திரு. ஜெகன் – திருமதி. மதுமிதா ஜெகன்
20. திரு. மதன்பிரபு – திருமதி. சித்ராலட்சுமி மதன்பிரபு
21. திரு. சரவணன் – திருமதி. ஹேமாமாலினி சரவணன்
22. திரு. ஞானதேசிகன் – திருமதி. தமிழரசி ஞானதேசிகன்
23. ஸ்ரீ தணிகை இஞ்சினியரிங், சென்னை – 97.

# உள்ளுறை



# ஸ்ரீ விநாயகர் துதிகள்

### கந்தர் அநுபூதி - ஸ்ரீ அருணகிரிநாதர்

நெஞ்சக் கனகல்லும் நெகிழ்ந் துருகத்
தஞ்சத் தருள் ஷண்முகனுக் கியல்சேர்
செஞ்சொற் புனைமாலை சிறந்திடவே
பஞ்சக் கர ஆனை பதம் பணிவாம்.

### திருப்புகழ் - ஸ்ரீ அருணகிரிநாதர்

விடம் அடைசு வேலை அமரர்படை சூலம்
விசயன் விடு பாணம் எனவேதான்
விழியும்அதி பார விதமும்உடை மாதர்
வினையின்விளை வேதும் அறியாதே
கடிஉலவு பாயல் பகல்இரவெ னாது
கலவிதனில் மூழ்கி அறிதாய
கயவன்அறி வீனன் இவனும்உயர் நீடு
கழல்இணைகள் சேர அருள்வாயே
இடையர்சிறு பாலை திருடிகொடு போக
இறைவன்மகள் வாய்மை அறியாதே
இதயமிக வாடி உடையபிளை நாத!
கணபதி! என நாமம் முறைகூற
அடையலவர் ஆவி வெருவஅடி கூர
அசலும்அறி யாமல் அவர்ஓட
அகல்வதென டாசொல் எனவுமுடி சாட
அறிவருளும் ஆனை முகவோனே.

### திருஇரட்டை மணிமாலை - ஸ்ரீ நம்பியாண்டார் நம்பி

அமரா அமரர் தொழுஞ்சரண் நாரைப்பதி அமர்ந்த
குமரா குமரர்க்கு முன்னவனே கொடித் தேர் அவுணர்
தமரா சறுத்தவன் தன்னுழைத் தோன்றினனே எனநின்
றமரா மனத்தவர் ஆழ் நரகத்தில் அழுந்துவரே.



# ஸ்ரீ சிவபெருமான் துதிகள்

### திருக்கடைக் காப்பு - ஸ்ரீ திருஞானசம்பந்தர்

சினம் மலி அறுபகை மிக பொறி சிதைதரு வகை வளி நிறுவிய
மனன் உணர்வொடு மலர்மிசை எழுதருபொருள் நியதமும் உணர்பவர்
தனது எழில் உரு அதுகொடு அடைதகுபரன் உறைவது நகர் மதில்
கனம் மருவிய சிவபுரம் நினைபவர் கலைமகள் தர நிகழ்வரே.

திகழ் சிவபுர நகர் மருவிய சிவன் அடி
இணை பணி சிரபுர
நகர் இறை தமிழ்விரகனது உரை நலம்மலி
ஒருபதும் நவில்பவர்
நிகழ்குலம் நிலநிறை திருவுரு நிகரில
கொடை மிகு சயமகள்
புகழ் புவி வளர் வழி அடிமையின் மிகை புணர்
தர நலம் மிகுவரே.

### தேவாரம் - ஸ்ரீ திருநாவுக்கரசர்

தொண்டு படு தொண்டர் துயர் தீர்ப்பான் தான் காண்
தூ மலர்ச்சேவடி இணை எம்சோதியான் காண்
உண்டு படு விடம் கண்டத்து ஒடுக்கினான் காண்
ஒலிகடலில் அமுது அமரர்க்கு உதவினான் காண்
வண்டு படு மலர்க்கொன்றை மாலையான் காண்
வாள்மதியாய் நாள்மீனும் ஆயினான் காண்
எண்திசையும் எழில் ஆரும் பொழிலார் கச்சி
ஏகம்பன் காண் அவன் என் எண்ணத்தானே.

### திருப்பாட்டு - ஸ்ரீ சுந்தரர்

பொன்னவன் பொன்னவன் பொன்னைத் தந்து என்னைப் போகவிடா
மின்னவன் மின்னவன் வேதத்தின் உள்பொருளாகிய
அன்னவன் அன்னவன் ஆமாத்தூர் ஐயனை ஆர்வத்தால்
என்னவன் என்னவன் என் மனத்து இன்புற்று இருப்பனே.

## திருவாசகம் - ஸ்ரீ மாணிக்கவாசகர்
## போற்றித் திருஅகவல்

நான்முகன் முதலா வானவர் தொழுது எழ
ஈரடியாலே மூவுலகு அளந்து
நாற்றிசை முனிவரும் ஐம்புலன் மலரப்
போற்றிசெய் கதிர்முடித் திருநெடு மால்அன்று
அடிமுடி யறியும் ஆதரவு அதனில்
கடுமுரண் ஏன மாகி முன்கலந்து
ஏழ்தலம் உருவ இடந்து பின் எய்த்து
ஊழி முதல்வ! சய சய என்று
வழுத்தியும் காணா மலரடி யிணைகள்
வழுத்துதற் கெளிதாய் வார்கட லுலகினில் 10

யானை முதலா எறும்பு ஈறாய
ஊனமில் யோனியினுள் வினை பிழைத்தும்,
மானுடப் பிறப்பினுள் மாதா உதரத்து
ஈனமில் கிருமிச் செருவினில் பிழைத்தும்,
ஒருமதித் தான்றியின் இருமையில் பிழைத்தும்
இருமதி விளைவின் ஒருமையில் பிழைத்தும்
மும்மதி தன்னுள் அம்மதம் பிழைத்தும்
ஈரிரு திங்களில் பேரிருள் பிழைத்தும்
அஞ்சு திங்களில் முஞ்சுதல் பிழைத்தும்
ஆறு திங்களில் நூறு அலர் பிழைத்தும் 20

ஏழு திங்களில் தாழ்புவி பிழைத்தும்
எட்டுத் திங்களில் கட்டமும் பிழைத்தும்
ஒன்பதில் வருதரு துன்பமும் பிழைத்தும்
தக்க தசமதி தாயொடு தான்படும்
துக்க சாகரத் துயரிடைப் பிழைத்தும்,
ஆண்டுகள் தோறும் அடைந்த அக்காலை
ஈண்டியும் இருத்தியும் எனைப்பல பிழைத்தும்
காலை மலமொடு கடும்பகற் பசிநிசி
வேலை நித்திரை யாத்திரை பிழைத்தும்,
கருங்குழல் செவ்வாய் வெள் நகை கார்மயில் 30

ஒருங்கிய சாயல் நெருங்கி உள்மதர்த்து
கச்சுஅற நிமிர்ந்து கதிர்த்துமுன் பணைத்து
எய்த்து இடைவருந்த எழுந்து புடைபரந்து
ஈர்க்கு இடைபோகா இளமுலை மாதர்தம்
கூர்த்த நயனக் கொள்ளையிற் பிழைத்தும்,
பித்த உலகர் பெருந்துறைப் பரப்பினுள்
மத்தக் களிறெனும் அவாவிடைப் பிழைத்தும்

கல்வி யென்னும் பல்கடற் பிழைத்தும்
செல்வ மென்னும் அல்லலிற் பிழைத்தும்
நல்குர வென்னும் தொல்விடம் பிழைத்தும் 40

புல்வரம் பாய பல துறை பிழைத்தும்
தெய்வ மென்பதோர் சித்தமுண்டாகி
முனிவி லாததோர் பொருளது கருதலும்
ஆறு கோடி மாயா சக்திகள்
வேறு வேறுதம் மாயைகள் தொடங்கின
ஆத்த மானார் அயலவர் கூடி
நாத்திகம் பேசி நாத்தழும் பேறினர்
சுற்றம் என்னும் தொல்பசுக் குழாங்கள்
பற்றி அழைத்துப் பதறினர்; பெருகவும்
விரதமே பரம் ஆக வேதியரும் 50

சரதம் ஆகவே சாத்திரம் காட்டினர்
சமய வாதிகள் தம் தம் மதங்களே
அமைவதாக அரற்றி மலைந்தனர்
மிண்டிய மாயா வாதம் என்னும்
சண்ட மாருதம் சுழித்தடித்து ஆஅர்த்து
உலோகா யதன் எனும் ஒண்திறல் பாம்பின்
கலா பேதத்த கடுவிடம் எய்தி,
அதிற்பெரு மாயை எனைப்பல சூழவும்
தப்பாமே தாம் பிடித்தது சலியாத்
தழலது கண்ட மெழுகது போலத் 60

தொழுது உளம்உருகி அழுதுஉடல் கம்பித்து
ஆடியும் அலறியும் பாடியும் பரவியும்
கொடிறும் பேதையும் கொண்டது விடாதுஎனும்
படியே யாகிநல் இடையறா அன்பின்
பசுமரத்து ஆணி அறைந்தாற் போலக்
கசிவது பெருகிக் கடல் என மறுகி
அகங்குழைந்து அனுகுலமாய் மெய் விதிர்த்துச்
சகம்பேய் என்று தம்மைச் சிரிப்ப
நாணது ஒழிந்து நாடவர் பழித்துரை
பூணது வாகக் கோணுதல் இன்றிச் 70

சதுர்இழந்து அறிமால் கொண்டு சாரும்
கதிஅது பரம அதிசயம் ஆகக்
கற்றா மனமெனக் கதறியும் பதறியும்
மற்றோர் தெய்வம் கனவிலும் நினையாது
அருபரத்து ஒருவன் அவனியில் வந்து
குருபர னாகி அருளிய பெருமையைச்

சிறுமையென்று இகழாமே, திருவடி யிணையை
பிறிவினை அறியா நிழலது போல
முன்பின் னாகி முனியாது அத்திசை
என்பு நைந்து உருகி நெக்குநெக்குஏங்கி 80

அன்பெனும் ஆறு கரையது புரள
நன்புலன் ஒன்றி, நாத என்று அரற்றி
உரை தடுமாறி உரோமம் சிலிர்ப்பக்
கரமலர் மொட்டித்து இருதயம் மலரக்
கண்களி கூர நுண்துளி அரும்பச்
சாயா அன்பினை நாள்தோறும் தழைப்பவர்
தாயே யாகி வளர்த்தனை போற்றி!
மெய்தரு வேதிய னாகி வினைகெட
கைதர வல்ல கடவுள் போற்றி!
ஆடக மதுரை யரசே போற்றி! 90

கூடல் இலங்கு குருமணி போற்றி!
தென்தில்லை மன்றினுள் ஆடி போற்றி
.இன்று எனக்கு ஆரமுது ஆனாய் போற்றி
மூவா நான்மறை முதல்வா போற்றி
சேஆர் வெல்கொடிச் சிவனே போற்றி
மின்னா ருருவ விகிர்தா போற்றி
கல்நார் உரித்த கனியே போற்றி
காவாய் கனகக் குன்றே போற்றி
ஆ!ஆ! என்தனக்கு அருளாய்போற்றி
படைப்பாய் காப்பாய் துடைப்பாய் போற்றி 100

இடரைக் களையும் எந்தாய் போற்றி
ஈச போற்றி இறைவ போற்றி
தேசப் பளிங்கின் திரளே போற்றி
அரைசே போற்றி அமுதே போற்றி
விரைசேர் சரண விகிர்தா போற்றி
வேதி போற்றி விமலா போற்றி
ஆதி போற்றி அறிவே போற்றி
கதியே போற்றி கனியே போற்றி
நதிசேர் செஞ்சடை நம்பா போற்றி
உடையாய் போற்றி உணர்வே போற்றி 110

கடையேன் அடிமை கண்டாய் போற்றி
ஐயா போற்றி அணுவே போற்றி
சைவா போற்றி தலைவா போற்றி
குறியே போற்றி குணமே போற்றி
நெறியே போற்றி நினைவே போற்றி

வானோர்க்கு அரிய மருந்தே போற்றி
ஏனோர்க்கு எளிய இறைவா போற்றி
மூவேழ் சுற்றும் முரணுறு நரகிடை
ஆழாமே அருள் அரசே போற்றி
தோழா போற்றி துணைவா போற்றி 120
வாழ்வே போற்றி என் வைப்பே போற்றி
முத்தா போற்றி முதல்வா போற்றி
அத்தா போற்றி அரனே போற்றி
உரையுணர்வு இறந்த ஒருவ போற்றி
விரிகடல் உலகின் விளைவே போற்றி
அருமையி லெளிய அழகே போற்றி
கருமுகி லாகிய கண்ணே போற்றி
மன்னிய திருவருள் மலையே போற்றி
என்னையும் ஒருவ னாக்கி இருங்கழல்
சென்னியில் வைத்த சேவக போற்றி 130
தொழுத கை துன்பம் துடைப்பாய் போற்றி
அழிவிலா ஆனந்த வாரி போற்றி
அழிவதும் ஆவதும் கடந்தாய் போற்றி
முழுவதும் இறந்த முதல்வா போற்றி
மானேர் நோக்கி மணாளா போற்றி
வானகத்து அமரர் தாயே போற்றி
பாரிடை ஐந்தாய்ப் பரந்தாய் போற்றி
நீரிடை நான்காய் நிகழ்ந்தாய் போற்றி
தீயிடை மூன்றாய்த் திகழ்ந்தாய் போற்றி
வளியிடை இரண்டாய் மகிழ்ந்தாய் போற்றி 140

வெளியிடை ஒன்றாய் விளைந்தாய் போற்றி
அளிபவர் உள்ளத்து அமுதே போற்றி
கனவிலும் தேவர்க்கு அரியாய் போற்றி
நனவிலும் நாயேற்கு அருளினை போற்றி
இடைமருது உறையும் எந்தாய் போற்றி
சடையிடைக் கங்கை தரித்தாய் போற்றி
ஆரூர் அமர்ந்த அரசே போற்றி
சீரார் திருவை யாறா போற்றி
அண்ணா மலைஎம் அண்ணா போற்றி
கண்ணா ரமுதக் கடலே போற்றி 150
ஏகம்பத்து உறை எந்தாய் போற்றி
பாகம் பெண்ணுரு ஆனாய் போற்றி
பராய்த்துறை மேவிய பரனே போற்றி
சிராய்பள்ளி மேவிய சிவனே போற்றி

மற்றோர் பற்றிங்கு அறியேன் போற்றி
குற்றா லத்தெம் கூத்தா போற்றி
கோகழி மேவிய கோவே போற்றி
ஈங்கோய் மலைஎம் எந்தாய் போற்றி
பாங்கார் பழனத் தழகா போற்றி
கடம்பூர் மேவிய விடங்கா போற்றி 160
அடைந்தவர்க்கு அருளும் அப்பா போற்றி
இத்தி தன்னின் கீழ் இரு மூவர்க்கு
அத்திக்கு அருளிய அரசே போற்றி
தென்னா டுடைய சிவனே போற்றி
எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி
ஏனக் குருளைக்கு அருளினை போற்றி
மானக் கயிலை மலையாய் போற்றி
அருளிட வேண்டும் அம்மான் போற்றி
இருள்கெட அருளும் இறைவா போற்றி
தளர்ந்தேன் அடியேன் தமியேன் போற்றி 170
களங்கொளக் கருத அருளாய் போற்றி
அஞ்சேல் என்றிங்கு அருளாய் போற்றி
நஞ்சே அமுதா நயந்தாய் போற்றி
அத்தா போற்றி ஐயா போற்றி
நித்தா போற்றி நிமலா போற்றி
பத்தா போற்றி பவனே போற்றி
பெரியாய் போற்றி பிரானே போற்றி
அரியாய் போற்றி அமலா போற்றி
மறையோர் கோல நெறியே போற்றி
முறையோ தரியேன் முதல்வா போற்றி 180

உறவே போற்றி உயிரே போற்றி
சிறவே போற்றி சிவமே போற்றி
மஞ்சா போற்றி மணாளா போற்றி
பஞ்சு ஏர் அடியாள் பங்கா போற்றி
அலந்தேன் நாயேன் அடியேன் போற்றி
இலங்கு சுடர் எம் ஈசா போற்றி
கவைத்தலை மேவிய கண்ணே போற்றி
குவைப்பதி மலிந்த கோவே போற்றி
மலைநா டுடைய மன்னே போற்றி
கலைஆர் அரிகே சரியாய் போற்றி 190
திருக்கழுக் குன்றிற் செல்வா போற்றி
பொருப்பமர் பூவணத் தரனே போற்றி
அருவமும் உருவமும் ஆனாய் போற்றி

மருவிய கருணை மலையே போற்றி
துரியமும் இறந்த சுடரே போற்றி
தெரிவு அரிதாகிய தெளிவே போற்றி
தோளா முத்தச் சுடரே போற்றி
ஆளானவர்கட்கு அன்பா போற்றி
ஆரா அமுதே அருளே போற்றி
பேரா யிரம் உடைய பெம்மான் போற்றி 200

தாளி அறுகின் தாராய் போற்றி
நீளொளி யாகிய நிருத்தா போற்றி
சந்தனச் சாந்தின் சுந்தர போற்றி
சிந்தனைக்கு அரிய சிவமே போற்றி
மந்திர மாமலை மேயாய் போற்றி
எம்தமை உய்யக் கொள்வாய் போற்றி
புலிமுலை புல்வாய்க்கு அருளினை போற்றி
அலைகடல் மீமிசை நடந்தாய் போற்றி
கருங்குரு விக்கன்று அருளினை போற்றி
இரும்புலன் புலர இசைந்தனை போற்றி 210

படியுறப் பயின்ற பாவக போற்றி
அடியொடு நடுஈறு ஆனாய் போற்றி
நரகொடு சுவர்க்க நானிலம் புகாமல்
பரகதி பாண்டியற்கு அருளினை போற்றி
ஒழிவற நிறைந்த ஒருவ போற்றி
செழுமலர்ச் சிவபுரத்து அரசே போற்றி
கழுநீர் மாலைக் கடவுள் போற்றி
தொழுவார் மையல் துணிப்பாய் போற்றி
பிழைப்பு வாய்ப்பு ஒன் றறியா நாயேன்
குழைத்த சொல் மாலை கொண்டருள் போற்றி 220

புரம்பல எரித்த புராண போற்றி!
பரம்பரஞ் சோதிப் பரனே போற்றி!
போற்றி! போற்றி!! புயங்கப் பெருமான்!
போற்றி! போற்றி!! புராண காரண!
போற்றி! போற்றி!! சய சய போற்றி!! 225

## திருத்தொண்டர் புராணம் - ஸ்ரீ சேக்கிழார்

மன்னவன் உரைப்பக் கேட்ட அன்பர்தாம் மருண்டு நோக்கி
என்னையோர் பொருளாக் கொண்டே எம்பிரான் அருள்செய்தாரேல்
முன்வருநிதியி லாமை மனத்தினால் முயன்ற கோயில்
இன்னதாம் என்று சிந்தித்து எடுத்தவாறு எடுத்துச் சொன்னார்.

திருச்சிற்றம்பலம்



# ஸ்ரீ சிவகாமசுந்தரி துதிகள்

**அபிராமி அந்தாதி - ஸ்ரீ அபிராமி பட்டர்**

பொருந்திய முப்புரை செப்புரை செய்யும் புணர்முலையால்
வருந்திய வஞ்சி மருங்கல் மனோன்மணி வார்சடையோன்
அருந்திய நஞ்சு அமுதாக்கிய அம்பிகை அம்புயமேல்
திருந்திய சுந்தரி **அந்தரி** பாதம் என் சென்னியதே.

சுந்தரி எந்தை துணைவி என் பாசதொடரை எல்லாம்
வந்தரி சிந்துர வண்ணத்தினாள் மகிடன் தலைமேல்
**அந்தரி** நீலி அழியாத கன்னிகை ஆரணத்தோன்
கந்தரி கைத்தலத்தாள் மலர்த்தாள் என் கருத்தனவே.

**மலைவளர்காதலி - ஸ்ரீ தாயுமானவர்**

பூதமொடு பழகி வளர் இந்திரியமாம் பேய்கள்
புந்திமுதல் ஆனபேய்கள்
போராடு கோபாதி ராக்ஷசப் பேய்கள் என்
போதத்தை ஊடு அழித்து,
வேதனை வளர்த்திடச் சதுர்வேத வஞ்சன்
விதித்தான்; இவ் அல்லல் எல்லாம்
வீழும் படிக்கு உனது மௌன மந்த்ராதிக்ய
வித்தையை வியந்து அருள்வையோ ?
நாத வடிவு ஆகிய மஹா மந்த்ர ரூபியே!
நாதந்த வெட்டவெளியே!
நற்சமயமான பயிர் தழைய வரும் மேகமே!
ஞான ஆனந்தமயிலே!
வாதமிடு பரசமயம் யாவுக்கும் உணர்வு அரிய
மகிமைபெறு பெரியபொருளே!
வரைராஜனுக்கு இருகண் மணியாய் உதித்த
மலைவளர்காதலிப் பெண்உமையே!



# அந்தரி அந்தாதி

- அருட்கவி ஸ்ரீ காளிதாசர்



காப்பு

அத்தி முகத்தனை சத்தி புதல்வனை அத்துவித
புத்தித் துணையொடு பத்தி புரிந்திடில் தத்துவமாம்
முத்திப் பொருளினை நத்தி யளித்திடும் வித்தகமா
உத்திக் கவியினைச் சித்திக் கவருளும் பித்தனுக்கே

நூல்

போற்றி அயனொடு பூதரன் காண்கிலாப் பொன்னடியை
ஆற்றின் புனல்மதி ஆத்தியைச் சூடிய அந்தரியாள்
ஏற்றிப் பரவிட ஏங்குவன் வாக்குற வெண்தாமரையில்
வீற்றி யருள்புரி வீணையின் வாணியை வைத்தனளே 1

வைத்திய நாதனின் வெண்ணிலாக்கேசனின் வண்ணமுறும்
கைத்தலம் பற்றிய கன்னியள் கைலைவாழ் கோமகளாம்
மைத்திகழ் கண்ணியள் மாதவன் தங்கையள் முத்தியுற
வைத்தனள் ஏழையை வஞ்சக வாழ்விலா வையகத்தே 2

அகத்தில் அறனும் அருளும் அமைதி யுறவளித்தாய்
இகத்தின் இருளைக் களைந்து பரத்தில் ஒளிரவைத்தாய்
உகந்த பொருளாய் உளத்தில் உறுதி உவந்தளித்தாய்
மகந்தாய் முறுவல் முகத்தாய் மனமார் மதமழித்தே 3

மழித்தேன் வளர்த்தேன் முடியை முடிவிற் பயனறியேன்
பழித்தேன் துதித்தேன் சமய நெறியின் இயலறியேன்
கழித்தேன் பிறவாப் பொழுதை! குகனாம் குருமொழியால்
அழித்தேன் அயனார் எழுத்தை, அருளுன் அடிதொழுதே 4

தொழுதால் துயரம் துடைத்துத் துகளாய் வினையகற்றிப்
பழுதாய் பிதற்றும் பவமால் களைந்து பதமளிப்பாள்
அழுதால் நெகிழும் அகத்தாள் அருளாய் அரவணைப்பாள்
கழுதாய்ப் பிறக்கும் உயிர்க்கும் கனிவாள் கலாதரியே 5

கலையை இடத்தும் வலத்தும் இயற்றி ஒருங்குறையும்
நிலையை எளியேன் குருவின் மொழியால் உணர்ந்தமையால்

அலையை அகத்தில் அகற்றி அருளுன் அடிபணிந்தேன்
மலையின் மகளாய் மகிழும் மதங்கி நினைப் புகழ்ந்தே 6

நினைப்பும் மறப்பும் ஒழிந்த நிலையை யுறுவதனால்
தினையின் அளவும் துயரம் அணுகா துருவெடுக்கும்
வினையாய் விளையும் விதியின் பயனை யொழித்திடுவாம்
சுனையார் வரையோன் மகளாய்ச் சுடரும் சுரேசுரியே 7

சுரத்தி லுறைந்து கவினைப் பொழியும் சுடரொளி உன்
கரத்தில் மறியும் மழுவும் திகழப் பெறுவதனால்
உரத்தை எளியேன் உளத்தால் உவந்தேன் கழல்பணியும்
வரத்தை யளித்தாய் வராகி யெனுந்தூ வடிவினளே 8

வடிவை அபிராமி அன்னை வயிரவி வைணவியைத்
துடியை யெரியை யெடுத்த வளைக்கரங் கொண்டவளை
கொடிய பிறவித் துயரங் களைந்திட வேண்டியவள்
அடியைப் பணிந்து புகழ்வாம் அரகர என்றிடவே 9

என்றும் இளையாய் எளியன் இதயத் தொளிர்ந்திடுவாய்
அன்றும் கருவில் புரந்து கனிவாய் அருளிய தாய்
இன்றுன் திருவில் இணைத்தாய் இகத்தின் நலமளிப்பாய்
ஒன்றும் அறியேன் உனையான் பணிந்தேன், சரணடைந்தே 10

சரணமாய்ச் செஞ்சடை நாதனார் வேண்டிடச் சற்குருவாய்ப்
பிரணவ நற்பொருள் ஓதிய போதனாய்ப் பூமலரும்
சரவணப்பொய்கையில் தோன்றிய சோதியார் சண்முகனைக்
கரமுறக் கூப்பியாம் போற்றிடுங் கந்தனை ஈன்றவளே 11

ஈரமும் வீரமும் ஈந்தென் இதயமும் ஏற்றனையோ
ஆரமாய் ஆருயிர் சேர்ந்துன் அழகெனக் கொண்டனையோ
பாரமும் பேரமும் பூண்டு பழிசொலும் பூதலத்தின்
பேரொளி வீசிடும் பொன்னிற் பொருளினில் பற்றிலமே 12

பற்றிப் பணிந்தனம் நின்றன் திருவடி யெம்மனத்துள் !
ஏற்றி இதழ்ந்தனம் ஈனர் இயல்பெலாம் ! ஏரகத்தைச்
சுற்றி மகிழ்ந்தனம் ! சேயோன் தகவுறு சூர்மயிலின்
பெற்றி புகழ்ந்தியாம் போற்றிப் பரவுவாம் பூங்கொடியே 13

கொடிய பிறவி பலவு மெடுத்துக் களைத்திளைத்து
மடியு முடலை நரியு மெரியும் விழையவைத்தாய்,
முடியில் நதியை யணிந்தாய் ! உயிரார் பிரிவுறும்நாள்
அடியேன் உழன்று வருந்தாது அருள் உன் திருவடியே 14

திருவை யறத்தை தகவைத் திறத்தை யருளியபின்
கருவை யொழித்தெம் பிறப்பைத் தடுத்துன் கழலடிசார்
மருவை யளிக்கும் மலராய் அடியேன் நெகிழவைத்தாய்!
குருவை குகனை மடியி லிருத்தி மகிழ்பவளே. 15

பவத்தைத் தடுத்துப் பயத்தைக் கெடுத்துக் குருமொழியாம்
தவத்தைக் கொடுத்துத் தயவை யருளிப் பரம்பொருளாம்
சிவத்தை யடுத்துச் சிறக்கும் சிவையின் நெறியுற நாம்
அவத்தை யிகழ்வாம் அறத்தைப் புகழ்வாம் அருந்தமிழே 16

அருந்தமிழ்க் கூடல் இலங்கிடும் செந்நாப் புலவரிசை
இருந்தமிழ்ச் சங்கம் இயற்றிய தேனார் இலக்கியத்தை
விருந்தெனக் கண்கள் இமைத்திடா வானோர் உலகுறையும்
பெருந்தகை வேந்தர் அமிழ்தென வைத்தாய் கயல்விழியே 17

விழியார் நுதலும் நதியார் சடையில் நிலவொளிரும்
எழிலார் அணியும் மழுவார் கரமும் தமிழமுதை
மொழியாய் மொழியும் திருவாய் கொழிக்கும் முறுவலையும்
அழியா இளமை யுறுவாய் பணிந்தேன் அகத்துறையே 18

உறையும் இமயம் உகந்த மலையான் திருமகளாய்
மறையின் பொருளை மனத்தால் உணரும் மதியளிக்கும்
இறைவி! இகமும் பரமும் எளியேன் பெறுவதற்குப்
பிறையைப் பொலிவாய் அணிந்து புவனம் புரந்தருளே! 19

அருளை அறிவை அமுதார் அளியை அளித்தருளி
இருளைக் களையும் இனிய இணரின் மணமலரை
மருளை யழிக்கும் மணியை மறையின் முதலுருவாம்
பொருளை யருளும் எழிலார் பொழிலை மறந்திலமே 20

மறலி பணிந்து பரவும் மகதி! மலைமகளாம்
அறவி! அருளார் அமரி! அனந்தை! எனப் புகழ்ந்தேன்

பிறவி யொழிந்த மரணம் விழைந்தேன்! கனவரைவாழ்
துறவி யென யான் உறைய அருளும் தயாபரியே 21

பரித்தாய்! எளியன் தமிழைப் புரந்தாய்! திரிபுரமும்
எரித்தாய், நுதலின் விழியால் விதியைக் களைந்துளத்தை
வரித்தாய்! திறமும் வரமும் அருள்வாய், அரிமிசையூர்ந்
தெரியும் வெளிநீர் வளியும் புவியாள் மலைமகளே 22

மகதியர் போற்றும் மகதியாய்! முத்து மணிபுனைந்த
மகரிகை சூடி மகிடனைச் சாடும் மனோன்மணியாய்!
மகோததி வண்ணம் பெறுமா மதங்கி! மருள்நிறைந்த
மகவெனைக் காப்பாய் மதியொடு மந்தா கினியணிந்தே 23

மந்தர மாமலை மாதவ மேருவும் விந்தமொடு
வந்தனை செய்திடும் வெள்ளியங் கோட்டினில் வந்தருளும்
சுந்தர செந்திலைச் சிந்தைகொள் கந்தனைத் தந்தருளும்
நந்தமும் நேமியும் செங்கையி லேந்திடும் அந்தரியே 24

அந்தரி ஆயி அநாதியள் ஆதி அனந்தசத்தி
ஐந்தரி யம்மை யமாந்தகி அன்னை அருளகசை!
இந்திர சத்தி இலளிதை எண்டோள் இமயவதி
சுந்தரி சோதி சுமங்கலை சூரி சுரேசுரியே. 25

சூர்முதல் வென்ற சுரபதி வேலனை யீந்தருளும்
கார்முகில் வண்ணக் கயல்விழி கொண்டிடு கன்னிகையும்
பார்வளி செந்தீ புனல்வெளி யாண்டிடு பூங்கொடியும்
பார்வதி பத்ரை பகவதி யென்றொரு பொற்கொடியே 26

பொற்பதம் கொண்டவள் பத்திர பிஞ்சகி காளியளாய்
நற்பதம் நல்கிடும் நாயகி நான்முகி நாரணியாள்
கற்பக வல்லி நல் தையலங் காரணி கோமதியாள்
அற்புதம் ஆற்றிடும் அம்பிகை சாம்பவி அங்கணியே 27

அங்கணி அம்பிகை எண்டிசைச் சண்டிகை அந்தரியாள்
சங்கணி யோகினிச் செம்முலை மோகினி சுந்தரியாள்
சங்கரி வாமியள் மாதரி கோமலை யாமளையாம்
பைங்கிளிப் பாதமும் நாமமும் போற்றுவாம் போதமுற்றே. 28

போதம் அளிப்பவள் ஏதம் அறுப்பவள் நான்மறையாம்
வேதம் உடைப்பவள் நாதம் நிறைப்பவள் வாக்குரைத்து
நீதம் தருபவள் சீதம் அனையவள் தூயவளாய்க்
கீதம் விழைபவள் பேதங் களைபவள் தேமொழியே. 29

தேனொடு பாலும் கனியுறு சாறும் முழுக்குடையாள்
வானோடு தீயும் வளியொடு மண்ணும் புனலுடனாள்
கானிடை வாழும் குகாரணி யென்றும் கனிவுடையாள்
ஊனொடு சேரும் உயிர்க்கெலாம் அன்னை வயிரவியே 30

வயிரவி வைணவி பாலையின் பாவையள் வேதமெனும்
பயிரினை யூக்கிடப் பாழ்வினை பாற்றினள் ஆணவமார்
மயிடனைச் செற்றிடும் மாசினை மாற்றிடும் மூர்த்தியுனில்
உயிரினைச் சேர்த்தியாம் பாடுவம் ஊற்றென வுள்ளொளியே 31

உள்ளத் திருத்தி மகிழ்ந்துகொண் டாட மலைமகளை
எள்ளத் தனையும் நினைந்தில னாகித் திருவடியைக்
கள்ள மனத்தால் பணிந்திடா ஏழைக் கருள்புரிந்தாய்
வெள்ளைக் கமலத் தமர்ந்திசை பாடுங் கலைமகளே 32

மங்கை மகிடா சுரமர்த் தனியும் மகேசுரியும்
நங்கை அபிராம வல்லிக் கொடியும் மதியாவு
கங்கை முடிகொள் கவுரி சிவையும் எழிற்கிளியை
அங்கை அணைக்கும் அருளார் கயற்கண் உமையவளே 33

உமை யான் பணிந்தேன் கவிதை புனைந்தேன் அகமுருகக்
குமைந்தேன் கனகக் குழையாய் புகல்வாய் நினக்கினிதோ
அமைதி யிழக்கும் மனமும் பெறவோ ? பனிவரைவாழ்
உமையாய் ! உயிர்கள் அனைத்தும் புரந்தாய் பவமறுத்தே 34

அறுபதக் கீதம் இலங்கும் மருமலர் ஏற்றருளும்
மறுவறு வுள்ளத் தொளிரும் மயேசுரி மாதரியாள்
அறுமுக ஞானக் குருவை அருளிடும் அந்தரியாள்
நறுவிரை யாரும் நிமலி திருவடி யாவதுவே 35

யாகம் அழித்தவள்,யோகம் அளித்தவள், மோகினியாள் !
மோகம் மழித்தவள், மேக நிறத்தவள் வேதவிடைப்

பாகன் உருவினில் பாகம் பெறுபவள், பார்வதியாள்
போகம் பழித்தவள், நாகம் உறுபவள் உத்தமியே 36

உளியால் வடித்த வரையார் குகையாய் குடைந்தெடுத்த
தளியை விடுத்துத் தழலாய்த் திகழுந் திரிபுரையாள்
வளியும் புனலும் வெளியுங் கனலும் புவியுமுற்ற
எளியள்! இதயத் துறையின் ஒளிரும் எழிலுருவே! 37

எழிலாய்ச் சுழலும் சுடர்க ளிரண்டின் கதிரொளியைப்
பொழியுங் கருணை விழிக ளிரண்டும்! பனிவரையின்
பொழிலில் உறையும் புனிதை விழையும் தமிழிசையை
மொழியுந் திறனும் எளியேன் பெறவும் அருளுவதே 38

அமரியை அஞ்சனக் கண்ணியை அம்பிகை அந்தரியை
கமலியைச் சூலியைக் கௌரியைக் கோதையைக் கார்த்திகையை
நிமலியை நீலியை நிர்க்குணி நர்த்தன நாயகியை
விமலியை வாழ்த்துவம் வேண்டுவம் வல்லப வைணவியே 39

வாமியை முக்கணி வாலையை விந்தையை வல்லணங்கை
காமியைக் கந்தனை யீந்திடு கன்னிகை கொற்றவையை
நேமியுஞ் சங்கமும் ஏந்திடு நற்சிவ காமியன்னை
சோமியைச் சத்தியைச் சூலியை! நாடுவம் முண்டகத்தே! 40

முண்டனை மாருத வேகமார் சண்டனை முன்னொருநாள்
தண்டனை தந்ததும் திங்களார் அண்டனை ஆலமுறுங்
கண்டனை பாதியாய் வாமமாய்க் கொண்டதுங் கூர்ந்தறியா
வண்டனை வேல்விழி நோக்கினாற் கண்டனை வைரமுத்தே 41

வையமும் வாழ்த்திட வீணரை வீழ்த்திடும் வாலையளாய்
மையிடு மூவிழி சந்திர சூரிய அக்கினியாய்
உய்யவுன் பொன்னடி உள்ளின னாதலின் ஒல்லுவனோ
மெய்யெனும் பொய்யதில் முழ்கவும் மாயமா மோகினியே 42

மோகமோர் ஆயிரம் மூண்டிடத் தோன்றிய வல்வினையால்
ஆகமோர் ஆயிரம் பெற்றிடும் அல்லலை நித்தலொடு
நாகமோர் ஆயிரம் தேயுமார் நாரியை ஏத்திடலால்
யாகமோர் ஆயிரம் செய்திடும் பெற்றியை எய்துவமே 43

எயினன் தொடுத்த கணையைத் தடுத்த எறும்பெனவாய்
மயிலின் மிசையார் முருகை யளித்து அருள் புரிவாள்
கயிற்றை விடுத்தே உயிரைப் பறிக்கும் நமன் கலங்க
மயிடன் முடியை மலர்ச்சீர் அடியால் மிதிப்பவளே 44

மிதிலைக் குமரி மகிழ மழையாய்ச் சரம் விடுத்து
விதியின் விளைவை விரும்பும் அரக்கன் சிரமறுத்த
நதியை அழைத்த குலத்தோன் பணிய நலமளித்தாள்
மதியைச் சடையில் அணிந்து மகிழ்மா மடப்பிடியே 45

மாமை நிறத்துறு மங்கல சண்டிகை மாதரியாள்
காமி குகாரணி கொற்றவை குண்டலி காலகண்டி
வாமி வராலிகை வல்லபி வஞ்சனி வல்லணங்கு
சோமி சுபங்கரி சீதள சௌந்தரி சங்கரியே 46

சங்கரி சூரி சனாதனி சாம்பவி சிற்பரையாள்
புங்கவி சத்தி பதந்தரு புண்ணிய பத்திரையாள்
அங்கணி அம்பை அனுபவை அம்பிகை அம்பணத்தி
மங்கலை மாரி மலைவளர் காதலி மாமலரே 47

மருவாய் மலர்வாய் மருட்கை மழிப்பாய் மனத்தகத்தில்
கருவாய்க் கிடப்பாய் கனலாய் நடப்பாய் கடனிறத்தோய்
அருவாய் வெளியில் நடிக்கும் ஒளியோய் அருளுணர்வைத்
தருவாய் தகவும் தயையும் தழைக்கும் தயாபரியே 48

தேனார் மொழியினாய் மீனார் விழியினாய் தொல்வினையால்
ஏனோ மறந்துனை வாணாள் கழித்தனன் ஏதமிலாய்
தானே உவந்தெனை ஆட்கொண் டருளினாய் ஊனுயிராய்
கூனார் உளத்தினை நேராய் நிமிர்த்தனை வேள்வியளே 49

வேத புராண நெறியோடு வாழும் வகையளிக்கும்
பாத மிரண்டைப் பணிவொடு வாழ்த்தும் உணர்வருளி
ஏத மொழித்தாய் இணருடன் ஏத்தும் இதயமருள்
போதப் பொருளைப் பரிந்தெமக் கீயும் பரம்பொருளே 50

பரமும் இகமும் பணிந்தோர் பெறநின் பதமிரண்டில்
கரமும் சிவக்க இடுமென் மலரை விழியிரண்டும்

சுரக்கும் களிகூர் அருவி சுமக்கும் புனல்கலக்க
இரக்கும் இமயப் பொருப்பில் இலங்கு பவானியளே 51

பவமும் அவமும் பழித்தோர் பதத்தின் புகழ்பரவி
சிவமாய்க் கிடந்து சருகாய் முடங்கி சுடரொளியார்
சவமாய் நடந்து தவவாழ் வுறுவோர் சனாதனியை
நவகோ ணமதில் நினைந்து நயந்தால் நலந்தருமே 52

தருமம் தழைக்கும் உலகம் உவக்கும் உயர்வுளதால்
கருமம் பிறக்கும் வினைகள் இரண்டின் விளைவுளதால்
சருமம் உடையாம் உயிரார் அணிய உடலுளதால்
மருமம் மயலை மழிக்கும் மதங்கி மலரடியே 53

மாந்தரும் வேந்தரும் மற்றுளார் யாவரும் போற்றிடுமென்
ஏந்தலாம் ஆறிரு தோளுறு நாதனாம் ஏரகத்துச்
சேந்தனை யீந்தவள் பூந்துகில் ஆடையள் சித்தமுறுஞ்
சாந்தியைத் தோற்றிடுந் தூயளாம் நாரணன் சோதரியே 54

சோதனை செய்யவும் சோர்வினைக் கொய்யவும் செய்வினை சூழ்
வேதனை வீழவும் வையகம் வாழவும் வல்லவளாம்
வேதியன் தக்கனார் வேள்வியை வீக்கிய வீரபத்ர
நாதனைப் பாகமாய் வாமமாய்க் கொண்டிடு வாலையளே 55

வம்பிற்குக் கற்கிலேன் வாதிற்குக் கற்கிலேன் வாட்டமுறும்
கும்பிக்குக் கற்கிலேன் கும்பிக்கக் கற்றுளேன் பற்றுளதால்
செம்புற்ற குற்றமாய் நெஞ்சுற்ற நஞ்செலாம் நீக்கியென்றும்
நம்பிக்கை நல்குவாள் நாதாந்த நாரியள் நாரணியே 56

நாரத கானமும் துந்துபி கீதமும் நாவிசைக்க
ஏரகச் செல்வனை ஏத்திடச் செய்தெமை யீர்த்தனளோ
மாரத வீரருக் காற்றலால் மல்கிய மாண்புடையாய்
பாரத பூமியில் வெற்றியைத் தந்தநற் கொற்றவையே 57

கொல்லன் உலைக்களம் என்ன எரியும் உளத்தணலைத்
தொல்லை வளர்ந்திடும் என்றுன் அடியைப் பணிந்ததனால்
நல்லோர் நினைவுறும் ஞானச் சுடர்நல் விளக்கொளியை
வல்லாய் விழைந்தருள் செய்தாய் இடும்பை இனியிலமே 58

இடும்பை யுறுத்தும் இயல்பார் வயிற்றின திின்னலொடும்
ஒடுங்கு குளிரால் உலுக்கி வருத்தும் வகைபலவும்
நடுங்கத் துயரை நலிய வொழிக்கும் நயனுடையாய்!
தொடுங்கோ மகளுன் பதமுளம் மூகாம் பிகையுமையே 59

மூப்புறும் போதினும் மும்மலம் மூட்டிய மோகமுறும்
நாப்பிளர் பொய்யெலாம் நாயினேன் நாடினேன் நானிலத்தைக்
காப்பதுன் கொற்றமாய்க் கொண்டதால் கூற்றமும் கண்கலங்கு
தீப்பிணி யாயின தீர்த்திடுந் தெய்வமாக் காளியளே 60

காசினை யூடுறும் கார்க்குயில் போலடி யாருடனாம்
காசினி மீதுறுங் கற்றவர் மற்றவர் என்றுளருங்
காசினிற் சிந்தையைக் கொண்டவர் என்பதைக் காட்டினையோ
காசிநின் செஞ்சடைக் கங்கையால் தூயதாந் தேவியளே 61

தேவை திடும்பொழு தென்கினுந் தோழமை யாவதுடன்
தேவை குமலரைத் தீந்தமிழ்ப் பாவுடன் ஏற்றருளும்
தேவை யமாள்பதம் தேர்ந்திலன் தேர்வது நீர்க்குமிழாய்த்
தேவை யுலகினில் தோன்றிடு மாசையைத் தாழ்த்திடலே 62

தாமரை யானவள் பேரருள் கொண்டெமைத் தோற்றியதால்
தாமெவர்க் கொப்புளோம் என்றெணும் ஆணவ கன்ம மயல்
தாமதத் தன்மையார் தாழ்வினைத் தீர்ப்பதில் திண்ணமுறும்
தாமரை யாளுறு மாலவன் சோதரி பாதமதே 63

பாவனன் கொண்டிடு பாவக நெஞ்சுறும் பாவனையேன்
பாவமாய் புண்ணியப் பாரினில் தோன்றிய பான்மையுளேன்
பாவகி யேற்றிடும் பைந்தமிழ் சாற்றிடும் பாமலரைப்
பாவலர் போற்றிடப் பாடிடப் பேரருள் பூங்கொடியே 64

பூதரைக் காவலாய்ப் பெற்றிடும் வெள்ளியங் கோட்டருளும்
பூதர நாயகி பூதியேன் பற்றிடும் பூங்குழலி
பூதலம் யாவையும் சேவடி யோரடி கொண்டருளும்
பூதரன் சோதரி நாரணி நான்முகி சாம்பவியே 65

சாரண ரேத்திடுஞ் செந்தமிழ் நூலுறும் வையகத்தில்
சாரதர் சூழ்ந்திடச் சிங்கமும் ஊர்ந்திடும் ஆன்மநலச்

சாரதி என்றெமுள் வந்தவள் வீணுற வைத்தனளோ
சாரகக் கூடுறும் எண்ணிலா வண்டுறும் ஊழுலகே 66

ஊழியல் தேர்ந்திலன் உத்தம நற்குணம் ஒன்றறியேன்
ஊழியில் ஒன்றிடும் உண்மையை உன்னடி ஒன்றுணர்த்தும்
ஊழியாய்! பொன்னடி போற்றிடப் பைந்தமிழ் மாலையொடு
ஊழியம் செய்திடற்கு ஏங்கிடும் ஊமையேன் பேசியென்னே 67

ஏறொடு கட்டிய ஏறெனும் ஏழையேன் தன்வினையை
ஏருடை நாதனாம் ஏத்துவார் ஏகனாம் என்றழைக்கும்
ஏரக வெற்பனின் ஈரடி தீர்த்திடத் தந்தவளை
ஏரியைக் காத்தவன் சோதரி என்பவர் ஞானியரே 68

ஞாயிறு நல்கிடு பொன்னுலகு வெங்கதிர்ப் பேரொளியை
ஞாளியேன் நின்னடி பற்றிய பேற்றினால் நற்றவமார்
ஞாலமும் பெற்றொளி கொண்டதைப் போலுமே வாழ்த்தியருள்
ஞானமும் உற்றொளி மண்டிய சீலனாய் மாநிலத்தே 69

மாதவஞ் செய்திடு மாதவ ரேத்திடு மங்கலஞ்சார்
மாதவி மாலையை மங்கைவாழ் மார்பினில் ஏற்றருளும்
மாதவன் சோதரி மாதரி மாசிலா மாதரசி
மாதவி மாமணி மூவிழி மீன்விழி மாமயிலே 70

மாலதி யுள்ளுறும் போதெலாம் மாதவச் சீலமுற்றால்
மாலதிப் பூங்கொடி மட்டிலா வாசமாய்ப் பூத்திடுங்கொல்
மாலதி மிக்குள மானிட சாதியை வாழ்த்துதற்கு
மாலவன் சோதரி வந்தருள் செய்திடில் சோர்விலமே 71

சோதியள்! சூலி சொர்ணாம்பிகை! சங்கரி! செங்கணவன்
சோதிரி! சண்பகச் சோலையின் சுந்தர மாமயிலாள்!
சோதிட நூலினோர் செப்பிடு மாறென வாழ்வியலின்
சோதனை யாமெனும் வேதனை தீர்த்தெனை ஆள்பவளே 72

ஆதியை! அம்புலி ஆறணி அங்கணாள் அந்தரியை!
ஆதியும் அந்தமும் இல்லதை உண்முகத் துள்ளொளியை
ஆதிரை சூழ்ந்திடத் திங்களார் தோன்றிடு நள்ளிரவும்
ஆதிவா ரந்தொறும் எண்ணுவாம் ஏத்துவாம் ஆலயத்தே 73

ஆண்பனை பெண்பனை யாமென மாற்றிடுஞ் சித்தமுள
ஆண்டவன் நல்லடி யாருடன் நேயமும் கொண்டுறவாய்
ஆண்டெலாஞ் சென்றிட அந்தரி, ஆணையால் ஆக்கியெனை
ஆண்டருள் கொண்டனை! கந்தனைத் தந்தனை காத்தருளே! 74

காவியச் செந்தமிழ் ஊற்றெனத் தோன்றிடு பொன்னியெனும்
காவிரி சூழ்ந்திடும் ஏரக நாதனை ஏத்திமகிழ்
காவியின் வண்ணமாய் ஆடையைக் கொண்டவர் கூட்டமுறக்
காவியின் மென்மலர்க் கண்ணியள் சேர்த்தெனை ஆள்பவளே 75

ஆலமாய்ப் பாற்கடல் அன்றொரு நாளுறா வண்ணமுற
ஆலவாய் அண்ணலார் காத்திடச் சந்தியாய் ஆகமுற்றாள்
ஆலயம் என்றெனை ஆண்டருள் ஆரியை அந்தரியாள்
ஆலமர் செல்வனார் பாதியாள் ஆற்றுவாள் ஐந்தொழிலே 76

ஐயவென் நெஞ்சினில் சாந்தியைத் தந்தருள் பூதகண
ஐயனின் ஐம்புலத் துய்யனின் சற்குரு நான்முகனார்
ஐயமும் தீர்த்தவன் ஐங்கரன் சோதரன், கந்தசத்தி
ஐயையின் சேவடி போற்றியாம் ஓதுவம் ஐந்தெழுத்தே! 77

ஐந்தரி ஆதியள் அம்பரச் சோதியள் ஆரமுதாள்
ஐந்திரந் தந்தெனை ஆண்டருள் கொள்வதும் என்றுளவோ
ஐந்திணை நானிலம் மும்மலம் ஈரடி ஒன்றிடுங்கால்
ஐந்தவி ஞானியர் என்னவே பாமரர் பொன்றுவரே. 78

பொறியின் வெளியாம் புலனின் இயல்பை வெளிப்படுத்திக்
குறியை அறியா நெறியில் உழலும் அறிவிலனென்
வறிய நிலையை வளமாய் நிறுத்தும் வரமருள்வாய்
மறியும் மழுவும் கரத்தி லெடுத்த மனோன்மணியே 79

மணியின் ஒளியை மறையின் முடிவை மனத்திருத்திப்
பணியை நதியைப் பனியார் மதியைச் சடைமுடியில்
அணியும் அழகை வியந்தேன் அலங்கற் கவிபுனைந்து
பணியும் திறத்தை அருள்க பரையாம் பகவதியே 80

பகலும் இரவும் பணிந்துனைப் பாடிப் பரவிடலால்
இகலும் கரவும் விடுத்தெமை நீங்கும் திருப்புகழைப்

புகலும் புலமை எளியேன் பெறவும் புரந்தருள் உன்
நகலும் நினைவும் மனத்தின் நிலவும் இடந்திலதே 81

இடத்தும் வலத்தும் இருகோள் விழியாய் எழுதலையின்
படத்தை விரிக்கும் அரவின் சடையாய் பருவரையார்
கடத்தி லுறையும் குமரி திருப்பாற் கடலளித்த
விடத்தைப் பருகும் இறைவ னிடத்தாய் மழைமுகிலே 82

மழையைப் பொழியும் எழிலார் முகிலை நிகர்த்தனை யென்
பிழையைப் பொறுத்துத் தமிழை யருளிப் புரந்திலையேல்
பிழையேன் எளியேன் பிறையை அணிந்த பணிச்சடையாய்
விழையேன் பொருளும் புகழும் உலகின் நிலையறிந்தே 83

நிலையா இளமை விழைந்து முதுமை யுணர்கிலனென்
அலையா ருளத்துள் அமைதி யருள்வாய்! அணிச்சடையில்
கலையார் நிலவும் படமார் அரவும் புனலுமுற்ற
மலையான் மகளாய் இமயத் துறையும் மலர்க்கொடியே 84

கொடிய பிறவி பலவு மெடுத்துக் களைத்து இளைத்து
மடியும் நிலையில் மனத்தை யிழுத்த மயேசுரியுன்
வடிவை நினைத்து மகிழும் எளியற் கருளிணைச்சே
வடியை பணிந்து பரவிப் புகழும் வரமருளே 85

அருளை மறந்து பொருளை நினைந்தேன் அவலமுறும்
இருளை இதயத் தியற்றி இகழும் இயல்புடையேன்
மருளை மழித்து மகிழ அருள்வாய்! படைக்கலமாம்
உருளை மழுவைத் தனுவை அயிலைக் கரத்தெடுத்தே 86

எடுத்த பிறவி இடரும் இழிவும் இயைந்திலவாய்க்
கடுத்த முகமும் கறுத்த அகமும் பொருந்திலவாய்த்
தடுத்த கருணைத் திறத்தைப் புகழ்வாம்! தமிழிசையால்
தொடுத்த அலங்கல் அணிந்து மகிழும் தழற்சுடரே! 87

தழலின் ஒளியாய் ஒளிர்வாய்! நினதின் திருவடியார்
கழலை யிடமாய் விழைவல் மறந்து விதிவினையால்
சுழலும் உலகின் சுழலில் சிறியேன் பொறிகலங்கி
உழலும் வரத்தை.எளியேன் பெறவோ தமிழ்மருவே? 88

மருமலர்க் கொன்றை மதியோடு கங்கை மகிழ்ந்தணிந்து
பருவரைக் கொங்கை பரசிவற் கீயும் பராபரையைக்
குருவருள் கூடும் திருமொழி யோர்ந்து குறிப்பதனால்
கருவினில் காப்பள் அருவினில் சேர்ப்பள் கலாதரியே 89

கலைமகள் போற்ற அலைமகள் வாழ்த்த இமவதியாம்
மலைமகள் நீயும் சிலைதனில் நின்றாய் மதியிலனென்
கொலையுளம் வீழ்த்தி உலையுளம் வீக்கிக் கழல் பணியும்
நிலையுளம் நல்குங் கலைமணித் தேவி நிரந்தரியே 90

நிரந்தரி நாரி நிமலி நிராலம்ப நிர்க்குணியாள்
நிரஞ்சனி நீலி நிருத்த நவகோண நாயகியாள்
நிரம்பிய ஞானே சுவரி நவசத்தி நர்த்தனியாள்
நிராமயி நாகா பரணி நிராகாரி நாரணியே! 91

நாரணி நான்முகி நாரியை நிர்க்குண நாயகியைப்
பூரணி மாரியைக் கோரியைச் சூரியைப் பைரவியை
வாரணி தேவியை வீரியை ஆரியை மாலினியைப்
பேரணி பாவினி லேத்துவம் பாடுவம் பொற்சுடரே! 92

சுடர்கள் இரண்டுன் இணைவிழி யாகும் அலையிமிழும்
கடல்கள் எலாமுன் துகிலணி யாகும் செழுமறையின்
மடல்கள் எலாமுன் திருவடி யேற்கும் எளியனுறும்
இடர்கள் எலாமுன் னருளினால் தீரும் இமவதியே 93

இமையோர் வணங்கும் இமவான் மகளாய்! மடப்பிடியாய்!
உமையாய் விளங்கு மணியார் உரக மயேசுரியாள்
இமையப் பொருப்பில் இயையும் விருப்பில் இயற்றமிழால்
எமையும் கவிதை புனைய அருளி மகிழ்ந்தனனே 94

மகிழ்ச்சி யெலாம்மனத் தோங்க அருட்கரு மாரிஉள
நெகிழ்ச்சி யுறவுனைப் போற்றி வணங்கியாம் பெற்றுவரும்
நுகர்ச்சி யெலாம் நினக் கன்றி யெமக்கிலை என்றருள்வாய்
புகழ்ச்சி யொடுதமிழ் மாலை புனைந்ததைப் பெற்றவளே 95

பெற்ற பெருமை யெலாமுன் திருப்புகழ் பாடுதலால்
உற்ற சிறப்பாம் உலகின் இயல்பெலாந் தேர்ந்தறியேன்
கற்ற கவியைக் கருதும் கமலியாய்! கூற்றுவனைச்
செற்ற செருவில் சமர்செய் செழுங்கலைப் பாவையளே! 96

பாவைத் தமிழில் புலமை யளித்துப் பிறவியுறு
நோவைத் தடுத்து நலத்தை யருள்வாய்! கருப்புவில்லாய்!
பூவில் நிகழும் மடந்தை புகழும் பராபரையாம்
தேவி நினக்கென் சிரமும் கரமும் பணிந்திடுமே 97

பணியும் முகிலார் நிலவும் நதியோடு செஞ்சடையில்
அணியும் மதங்கி! அமுதார் அமரியள்! அந்தரியாய்!
தணிகைக் குமரன் வடிவா யிலங்கிடு தண்ணளியாம்
மணிகண்ட நித்தியா னந்த குருமொழி தூயதுவே 98

தூயவள் சேவடி சிந்தையி லேத்துவாம்! தீந்தமிழால்
மாயவன் தங்கையாள் விந்தையை வாழ்த்துவாம்! பல்லுயிர்க்கும்
தாயவள்! திங்களுங் கங்கையுஞ் சென்னியிற் சூடிமகிழ்
தேயவள்! தேவியைத் தேர்ந்தியாம் போற்றுவம் பூதலத்தே 99

பூவில் உறைபவள் போற்றுந் தகையவள்! நான்முகனார்
நாவில் உறைபவள் ஏத்தும் நலத்தவள்! பூமணக்குங்
காவில் திகழ்ந்திடுங் கோயில் உறைபவள்! செந்தமிழாம்
பாவில் மகிழ்ந்திடு பத்திர காளியைப் போற்றுவமே! 100

## நூற்பயன்

பத்தியாய்ப் புந்தியில் அந்தரி அந்தாதி நூலிதனைச்
சித்தமாய்ச் சிக்கெனக் கொள்வரேல் எஞ்ஞான்றும் காலனையும்
எத்துவர் ஏழைமை யாகிலர் தீங்கில்லார் நோயணுகார்
பித்துறார் பொன்னலம் பாரினிற் பெற்றோங்கு பான்மையரே.

அந்தரி அந்தாதி முற்றிற்று



# ஸ்ரீ சிவசுப்ரமண்யர் துதிகள்

## திருப்புகழ் - ஸ்ரீ அருணகிரிநாதர்

அதல சேட னார்ஆட அகில மேரு மீதாட
அபின காளிதான் ஆட அவளோடன்(று)
அதிர வீசி வாதாடும் விடையில் ஏறு வார் ஆட
அருகு பூத வேதாளம் அவை ஆட
மதுர வாணி தான்ஆட மலரில் வேத னார் ஆட
மருவு வானு ளோர் ஆட மதிஆட
வனச மாமியார் ஆட நெடிய மாமனார் ஆட
மயிலும் ஆடி நீ ஆடி வரவேனும்
கதைவி டாத தோள்வீமன் எதிர்கொள் வாளி யால்நீடு
கருத லார்கள் மாசேனை பொடியாகக்
கதறு காலி போய்மீள விஜயன் ஏறு தேர்மீது
கனக வேத கோடுதி அலைமோதும்
உததி மீதி லேசாயும் உலக மூடு சீர்பாத
உவணம் ஊர்தி மாமாயன் மருகோனே
உதய தாம மார்பான ப்ரபுட தேவ மாராஜன்
உளமும் ஆட வா தேவர் பெருமாளே.

## பாடலின் தோற்றம்

இத்திருப்புகழ், ஸ்ரீ அருணகிரிநாதருடைய வாழ்க்கை வரலாற்றின் ஒரு பகுதியில் முக்கிய நிகழ்ச்சியுடன் தொடர்புடையது. இது சொற்சுவையும் பொருட்சுவையும் ஒருங்கே அமைந்த தேனினும் இனிய தெய்வ மணங்கமழுந் தீஞ்சுவைப் பாடல்.

ஸ்ரீ அருணகிரிநாதர் வாழ்ந்த திருவண்ணாமலையில், அருக சமயத்தைச் சேர்ந்த சம்பந்தாண்டான் என்பான் ஒருவன் இருந்தான். அவன் ஸ்ரீ அருணகிரிநாதருடைய அளவற்ற புகழைக் கண்டு அழுக்காறு கொண்டான். அப்பொழுது திருவண்ணாமலையை அரசுபுரிந்த பிரபுடதேவ மன்னன் முன் இருவருக்கும் வாது நிகழ்ந்தது. தனது வழிபடு கடவுளைச் சபையில் வரவழைத்துக் காட்டுவதாகவும், அதுபோல் அருணகிரியாரும் காட்டுதல் வேண்டும் என்றும் சம்பந்தாண்டான் வாதிட்டான். அதற்கு மறுப்பேதும் கூறாது ஸ்ரீ அருணகிரிநாதர் இணங்கினார். இரவு முழுவதும்

அபிசார ஓமம் புரிந்தும், வாய் வருந்த அழைத்தும் சம்பந்தாண்டானது வழிபடு மூர்த்தியாகிய ஸ்ரீ காளி தேவி வந்தார் இல்லை. அதனால், சம்பந்தாண்டான் படுதோல்வியுற்றான். பிரபுடதேவ மன்னன், தனது அமைச்சர், புரோகிதர், அறிஞர் முதலியோர் சூழ திருக்கோயிலுக்குச் சென்று ஆங்குத் திருக்கோபுரக் குடவரையில் தியானபரராக வீற்றிருக்கும் ஸ்ரீ அருணகிரியாரை அஞ்சலி செய்து, "அருட் கொண்டலே! சம்பந்தாண்டான் காளி தேவியைத் தருவித்துக் காட்டுந் திறனின்றித் தோற்றனன். கருணைகூர்ந்து எந்தை கந்தவேளை வரவழைத்து அடியேங்கள் உய்யும் பொருட்டுக் காட்டியருள வேண்டும்" என்று வேண்டி நின்றனன்.

ஸ்ரீ அருணகிரிநாதர் "கந்தவேளை எந்தவேளையுங் காணலாம். எங்கே நினைக்கினும் அங்கே என்முன் வந்து எதிர் நிற்பன்" என்று கூறிச் திருவண்ணாமலை கோயிலில் உள்ள சிவகங்கை திருக்குளத்தில் முழுகி, சிவகங்கைக் கரையில் இருக்கும் பதினாறுகால் மண்டபத்தின் ஈசானத்தூண் அருகில் நின்று, "ஐயனே! முன் ஒருமுறை பிரகலாதர் பொருட்டுத் திருமால் தூணிலிருந்து வெளிப்பட்டனர். இப்போது அடியேன் பொருட்டுக் கருணை வடிவான தேவரீர் இத்தூணிலிருந்து வெளிப்பட்டுக் காட்சி தரவேண்டும், என்று துதித்து, "எந்தத் திகையினும்" "கொடிய மறலியும்" "இருவர் மயலோ!" என்ற திருப்புகழ்ப் பாக்களைப் பாடி இறுதியில் ஆண்டவன் இன்ன இன்ன மூர்த்திகள் சூழ ஆடிக்கொண்டு வந்து காட்சி தரவேண்டும் என்று "அதல சேடனாராட" என்ற இத்திருப்புகழைப் பாடினார். அவ்வண்ணமே அறுமுகப் பரம்பொருள் அந்த பதினாறுகால் மண்டபத்தின் ஈசானத்தூணில் வந்து காட்சி தந்து அருளினார். அந்த தூணை மூலட்டானமாக கொண்டு பின்பு எழுப்பிய ஆலயம் இன்றும் திருவண்ணாமலையில் "ஸ்ரீ கம்பத்திளையனார் சன்னதி" என்ற பெயரில் கண்டு தரிசிக்கலாம்.

"சயிலமெ றிந்தகை வேற்கொடு
மயில்மிசை வந்தெனை யாட்கொளல்
சகமறி யும்படி காட்டிய பெருமாளே"

என்று கந்தனின் கருணை திறத்தை ஸ்ரீ அருணகிரிநாதர் மற்றொரு திருப்புகழில் நினைவு கூர்ந்து பாராட்டினார்.

## பதவுரை

**அதல சேடனார் ஆட** – அதல (பாதாள) உலகிலே வாழும் ஆதிசேடன் தனது பணாமகுடங்களை விரித்து ஆடவும்,
**அகில மேரு மீது ஆட** – மண்ணுலகமும் மகாமேருகிரியும் ஆடவும்,
**அபினகாளி தான் ஆட** – சிவத்திற்கு அன்னிய மில்லாதவளாகிய காளிதேவி ஆடவும்,
**அவளோடு** – அக்காளி தேவியுடன்,
**அன்று** – அந்நாளில்,
**அதிர வீசி வாது ஆடும்** – உலகமெல்லாம் அதிரும்படி கர சரணங்களை வீசி வாது புரிந்து திருநடனம் புரியும்

**விடையில் ஏறுவார் ஆட** – இடபவாகனத்தில் ஏறும் சிவபெருமான் ஆடவும்,
**அருகு பூத வேதாளம் அவை ஆட** – தேவரீரது பக்கத்தில் பூத வேதாளங்கள் யாவும் ஆடவும்,
**மதுரவாணி தான் ஆட** – இனிய வீணா கானம் எழுப்பும் சரஸ்வதி தேவி ஆடவும்
**மலரில் வேதனார் ஆட** – தாமரை மலர் மீது வாழுகின்ற பிரம தேவர் ஆடவும்,
**மருவு வானுளோர் ஆட** – உமது திருவடியைச் சார்ந்துள்ள தேவலோக வாசிகளாகிய அமரர்கள் ஆடவும்,
**மதி ஆட** – ஒளி பொருந்திய சந்திரன் ஆடவும், (நமது மனமானது ஆடவும்)
**வனச மாமியார் ஆட** – தாமரையில் வாழும் உமது மாமியாராகிய இலக்குமி தேவியாடவும்,
**நெடிய மாமனார் ஆட** – நீண்ட வடிவுடைய மாமனராகிய நாராயணர் ஆடவும்,
**மயிலும் ஆடி** – மயில் வாகனமும் ஆடவும்,
**நீ ஆடி** – அதன் மீது தேவரீரும் ஆடி,
**வரவேணும்** – எங்கள் முன் வந்தருள வேணும்.

**கதை விடாத தோள் வீமன் எதிர்கொள்** – கதாயுதத்தை விடாது தோள்மீது வைத்துள்ள வீமசேனனால் எதிர்க்கப்பட்டதும்,
**வாளியால் நீடு** – ஆயுதங்களினால் நீண்ட வலிமையுள்ளதுமாகிய,
**கருதலார்கள் மாசேனை பொடியாக** – பகைவர்களுடைய பெரிய சேனையானது மாண்டு பொடிபடும் படியும்,
**கதறு காலிபோய் மீள** – பயத்தினால் கதறுகின்ற பசுக்கூட்டம் பயம் நீங்கி மீளும் பொருட்டும்,
**விஜயன் ஏறு தேர் மீதில்** – அர்ச்சுனன் ஏறியுள்ள தேரில் சாரதியாக இருந்து,
**கனக வேத கோடு ஊதி** – பொன்மயமாய் வேத நாதத்துடன் கூடிய வெற்றி சங்கத்தை ஒலித்தவரும்,
**அலை மோதும் உததி மீதிலே சாயும்** – அலைகள் மோதுகின்ற கடலின் நடுவே பாம்பணையில் சாய்ந்து படுத்து இருக்கின்ற
**உலக மூடு சீர் பாதன்** – உலகத்தை ஓரடியால் அளந்து மூடிய சிறந்த திருவடியையுடையவரும்,
**உவணம் ஊர்தி** – கருட வாகனத்தை ஊர்தியாக உடையவரும் ஆகிய
**மாமாயன் மருகோனே** – மாயகலையில் சிறந்தவரும் ஆன திருமாலின் திருமருகரே
**உதய தாம மார்பான** – ஒளிபொருந்திய மாலை யணிந்த மார்புடன் கூடிய,
**பிரபுடதேவ மாராயன் உளமும் ஆட** – பிரபுட தேவ மகா மன்னனுடைய மனமானது சந்தோஷத்தில் களிக்கும்படி, அவர் உள்ளமும் ஆட
**வா தேவர் பெருமாளே** – எங்கள் முன் வா தேவர்கள் போற்றும் பெருமை மிகுந்தவரே !

## கருத்துரை

திருமால் மருகரே! பிரபுடதேவன் காண, தேவரும் மூவரும் சூழ, மயிலுமாட தேவரீரும் ஆடி, அடியேங்கள் உய்யும் பொருட்டு அருட்காட்சி தர வந்தருள வேண்டும்.

# கந்தர் கலிவெண்பா - ஸ்ரீ குமர குருபரர்

பூமேவு செங்கமலப் புத்தேளும் தேறரிய
பாமேவு தெய்வப் பழமறையும் – தேமேவு
நாதமும் நாதாந்த முடிவும் நவைதீர்ந்த
போதமும் காணாத போதமாய் – ஆதிநடு
அந்தம் கடந்த நித்தியானந்த போதமாய்ப்
பந்தம் தணந்த பரஞ்சுடராய் – வந்த
குறியும் குணமுமொரு கோலமுமற்று எங்கும்
செறியும் பரம சிவமாய் – அறிவுக்கு
அனாதியாய் ஐந்தொழிற்கும் அப்புறமாய் அன்றே
மனாதிகளுக்கு எட்டா வடிவாய்த் – தனாதருளின் 10

பஞ்சவித ரூப பரசுகமாய் எவ்வுயிர்க்கும்
தஞ்சமென நிற்கும் தனிப்பொருளாய் – எஞ்சாத
பூரணமாய் நித்தமாய்ப் போக்குவரவும் புணர்வும்
காரணமும் இல்லாக் கதியாகித் – தாரணியில்
இந்திரசாலம் புரிவோன் யாவரையும் தான்மயக்கும்
தந்திரத்தில் சாராது சார்வதுபோல் – முந்தும்
கருவின்றி நின்ற கருவாய், அருளே
உருவின்றி நின்ற உருவாய் – திரிகரணம்
ஆகவரும் இச்சை அறிவு இயற்ற லால்இலய
போகஅதி காரப் பொருளாகி – ஏகத்து 20

உருவும் அருவும் உருஅருவும் ஆகிப்
பருவ வடிவம் பலவாய் – இருள் மலத்துள்
மோகமுறும் பல்லுயிர்க்கு முத்தி அளித்தற்கு மல
பாகமுறவே கடைக்கண் பாலித்துத் – தேகமுறத்
தந்த அருவுருவம் சாரந்தவிந்து மோகினிமான்
பெந்த முறவே பிணிப்பித்து – மந்த்ரமுதல்
ஆறத்து வாவும் அண்டத்துஆர்த்த அத்துவாக்களும் முற்
கூறத் தகும் சிமிழ்ப்பில் கூட்டுவித்து மாறிவரும்
ஈரிரண்டு தோற்றத்து எழுபிறப்புள் யோனி எண்பான்
ஆரவந்த நான்குநூ றாயிரத்துள் – தீர்வரிய 30

கன்மத்துக்கு ஈடாய்க் கறங்கும் சகடமும்போல்
சென்மித்து உழலத் திரோதித்து – வெந்நிரய

சொர்க்காதி போகமெலாம் துய்ப்பித்துப் பக்குவத்தால்
நற்காரணம் சிறிது நண்ணுதலும் – தர்க்கமிடும்
தொன்னூல் பரசமயம் தோறும் அதுவதுவே
நன்னூல் எனத்தெரிந்து நாட்டுவித்து – முன்னூல்
விரதமுத லாயபல மெய்த்தவத்தின் உண்மைச்
சரியைகிரி யாயோகம் சார்வித்து – அருள்பெருகு
சாலோக சாமீப சாரூபமும் புசிப்பித்து
ஆலோகம் தன்னை அகற்றுவித்து – நால்வகையாம் 40

சத்திநி பாதம் தருதற்கு இருவினையும்
ஒத்துவரும் காலம் உளவாகிப் – பெத்த
மலபரி பாகம் வருமளவில் பன்னாள்
அலமருதல் கண்ணுற்று அருளி – உலவாது
அறிவுக்கு அறிவாகி அவ்வறிவுக்கு எட்டா
நெறியில் செறிந்தநிலை நீங்கிப் – பிறியாக்
கருணைத் திருஉருவாய்க் காசினிக்கே தோன்றிக்
குருபரனென்று ஓர்திருப்பேர் கொண்டு – திருநோக்கால்
ஊழ்வினையைப் போக்கி உடலறுபத் தெட்டுநிலம்
ஏழும் அத்துவாக்கள் இருமூன்றும் – பாழாக 50

ஆணவமான படலம் கிழித்து அறிவில்
காணரிய மெய்ஞானக் கண்காட்டிப் – பூணும்
அடிஞானத் தாற்பொருளும் ஆன்மாவும் காட்டிக்
கடியார் புவனமுற்றும் காட்டி – முடியாது
தேக்குபர மானந்தத் தெள்ளமுதம் – ஆகியெங்கும்
நீக்கமற நின்ற நிலைகாட்டிப் – போக்கும்
வரவும் நினைப்பும் மறப்பும் பகலும்
இரவும் கடந்து உலவா இன்பம் – மருவுவித்துக்
கன்மமலத் தார்க்குமலர்க் கண்மூன்றும் தாழ்சடையும்
வன்மழுவும் மானுமுடன் மால்விடைமேல் மின்னிடத்துப் 60

பூத்த பவளப் பொருப்பு ஒன்று வெள்ளிவெற்பில்
வாய்த்தனைய தெய்வ வடிவாகி – மூத்த
கருமமலக் கட்டறுத்துக் கண்ணருள் செய்து உள்நின்று
ஒருமலத்தார்க்கு இன்பம் உதவிப் – பெருகியெழு
மூன்றவத்தையும் கழற்றி முத்தருடனே இருத்தி
ஆன்றபர முத்தி யடைவித்துத் – தோன்றவரும்
யானெனதென்று அற்றஇடமே திருவடியா
மோன பேரானந்த முடியாக – ஞானம்

திருஉருவா இச்சை செயலறிவு கண்ணா
அருளதுவே செங்கை அலரா – இருநிலமே 70

சந்நிதியா நிற்கும் தனிச்சுடரே; எவ்வுயிர்க்கும்
பின்னமற நின்ற பெருமானே – மின்னுருவம்
தோய்ந்த நவரத்னச் சுடர்மணியால் செய்த பைம்பொன்
வாய்ந்த கிரண மணிமுடியும் – தேய்ந்தபிறைத்
துண்டம் இரு மூன்றுநிரை தோன்றப் பதித்தனைய
புண்டரம் பூத்தநுதல் பொட்டழகும் – விண்ட
பருவமலர்ப் புண்டரிகம் பன்னிரண்டு பூத்தாங்கு
அருள் பொழியும் கண்மலர் ஈராறும் – பருதி
பலவும் எழுந்துசுடர் பாலித்தாற் போலக்
குலவு மகரக் குழையும் – நிலவுமிழும் 80

புன்முறுவல் பூத்தலர்ந்த பூங்குமுதச் செவ்வாயும்
சென்மவிடாய்தீர்க்கும் திருமொழியும் – வின்மலிதோள்
வெவ்வசுரர் போற்றிசைக்கும் வெஞ்சூரனைத்தடிந்து
தெவ்வருயிர் சிந்தும் திருமுகமும் – எவ்வுயிர்க்கும்
ஊழ்வினையை மாற்றி உலவாத பேரின்ப
வாழ்வுதரும் செய்ய மலர்முகமும் – சூழ்வோர்
வடிக்கும் பழமறைகள் ஆகமங்கள் யாவும்
முடிக்கும் கமல முகமும் – விடுத்தகலாப்
பாச இருள் துரந்து பல்கதிரில் சோதிவிடும்
வாச மலர்வதன மண்டலமும் – நேசமுடன் 90

போகமுறும் வள்ளிக்கும் புத்தேளிர் பூங்கொடிக்கும்
மோகம் அளிக்கும் முகமதியும் – தாகமுடன்
வந்தடியில் சேர்ந்தோர் மகிழ வரம்பலவும்
தந்தருளும் தெய்வமுகத் தாமரையும் – கொந்தவிழ்ந்த
வேரிக் கடம்பும் விரைக்குரவும் பூத்தலர்ந்த
பாரப் புயசயிலம் பன்னிரண்டும் – ஆரமுதம்
தேவர்க்கு உதவும் திருக்கரமும் சூர்மகளிர்
மேவக் குழைந்தணைந்த மென்கரமும் – ஓவாது
மாரி பொழிந்த மலர்க்கரமும் பூந்தொடையல்
சேர அணிந்த திருக்கரமும் – மார்பகத்தில் 100

வைத்த கரதலமும் வாமமருங் கிற்கரமும்
உய்த்த குறங்கில் ஒருகரமும் – மொய்த்த
சிறுதொடிசேர் கையும்மணி சேர்ந்ததடங் கையும்
கறுவுசமர் அங்குசம்சேர் கையும் – தெறுபோர்

அதிர்கே டகம் சுழற்றும் அங்கைத் தலமும்
கதிர்வாள் விதிர்க்கும் கரமும் – முதிராத
கும்பமுலைச் செவ்வாய்க் கொடியிடையார் வேட்டணைந்த
அம்பொன் மணிப்பூண் அகன்மார்பும் – பைம்பொன்
புரிநூலும் கண்டிகையும் பூம்பட்டுடையும்
அரைஞாணும் கச்சை அழகும் – திருவரையும் 110

நாதக் கழலும் நகுமணிப்பொற் கிண்கிணியும்
பாதத்து அணிந்த பரிபுரமும் – சோதி
இளம் பருதி நூறா யிரங்கோடி போல
வளந்தரு தெய்வீக வடிவும் – உளந்தனில்கண்டு
ஆதரிப்போர்க்கு ஆருயிராய் அன்பரகத் தாமரையின்
மீதிருக்கும் தெய்வ விளக்கொளியே – ஓதியஐந்து
ஓங்காரத்து உள்ளொளிக்கும் உள்ளொளியாய் ஐந்தொழிற்கும்
நீங்காத பேருருவாய் நின்றோனே – தாங்கரிய
மந்திரமே சோரியா வான்பதமே மாமுடியாத்
தொந்தமுறும் வன்னமே தொக்காகப் – பந்தனையால் 120

ஒத்த புவனத் துருவே உரோமமாத்
தத்துவங்களே சத்த தாதுவா – வைத்த
கலையே அவயவமாக் காட்டும் அத்து வாவின்
நிலையே வடிவமா நின்றோய் – பலகோடி
அண்டம் உருவாகி அங்கம் சராசரமாய்க்
கண்ட சக்தி மூன்றுட் கரணமாய்த் – தொண்டுபடும்
ஆவிப் புலனுக்கு அறிவு அளிப்ப ஐந்தொழிலும்
ஏவித் தனி நடத்தும் எங்கோவே – மேவ
வரும் அட்ட மூர்த்தமாம் வாழ்வேமெய்ஞ் ஞானம்
தரும் அட்டயோகத் தவமே – பருவத்து 130

அகலாத பேரன்பு அடைந்தோர் அகத்துள்
புகலாகும் இன்பப் பொருப்பும் – சுகலளிதப்
பேரின்ப வெள்ளப் பெருக்காறும் மீதானம்
தேரின்ப நல்கும் திருநாடும் – பாரின்பம்
எல்லாம் கடந்த இருநிலத்துட் போக்குவரவு
அல்லாது உயர்ந்த அணிநகரும் தொல்லுலகில்
ஈறும் முதலுமகன்று எங்குநிறைந்து ஐந்தெழுத்தைக்
கூறிநடாத்தும் குரகதமும் – ஏறுமதம்
தோய்ந்து களித்தோர் துதிக்கையினால் பஞ்சமலம்
காய்ந்த சிவஞானக் கடாக்களிறும் வாய்ந்தசிவ 140

பூரணத்துள் பூரணமாம் போதம் புதுமலரா
நாரகத்துள் கட்டும் நறுந்தொடையும் காரணத்துள்
ஐந்தொழிலும் ஓவாது அளித்துயர்த்த வான்கொடியும்
வந்தநவ நாத மணிமுரசும் – சந்ததமும்
நீக்கமின்றி ஆடி நிழலசைப்பான் போல்புவனம்
ஆக்கி அசைத்தருளும் ஆணையும் தேக்கமழ்ந்து
வீசும் பனுவல் விபுதர் தனித்தனியே
பேசும் தசாங்கமெனப் பெற்றோனே தேசுதிகழ்
பூங்கயிலை வெற்பிற் புனைமலர்ப்பூங் கோதையிடப்
பாங்குறையும் முக்கண் பரஞ்சொதி – ஆங்கொருநாள் 150

வெந்தகுவர்க்கு ஆற்றாத விண்ணோர் முறைக்கிரங்கி
ஐந்து முகத்தோடு அதோமுகமும் – தந்து
திருமுகங்கள் ஆறாகிச் செந்தழற்கண் ஆறும்
ஒருமுகமாய்த் தீப்பொறியாறு உய்ப்ப – விரிபுவனம்
எங்கும் பரக்க இமையோர் கண்டு அஞ்சுதலும்
பொங்கும் தழல்பிழம்பைப் பொற்கரத்தால் அங்கண்
எடுத்தமைத்து வாயுவைக்கொண்டு ஏகுதியென்று எம்மான்
கொடுத்தளிப்ப மெல்லக் கொடுப்போய் – அடுத்ததொரு
பூதத் தலைவனொடு போதி எனத் தீக்கடவுள்
சீதப் பகீரதிக்கே சென்றுய்ப்ப – போதொருசற்று 160

அன்னவளும் கொண்டமைதற்கு ஆற்றாள் சரவணத்தில்
சென்னியில் கொண்டு உய்ப்பத்திருஉருவாய் – முன்னர்
அறுமீன் முலையுண்டு அமுதுவிளை யாடி
நறுநீர் முடிக்கணிந்த நாதன் – குறுமுறுவல்
கன்னியொடும் சென்று அவட்குக் காதலுருக் காட்டுதலும்
அன்னவள் கண்டு அவ்வுருவம் ஆறினையும் – தன்னிரண்டு
கையால் எடுத்தணைத்துக் கந்தனெனப் பேர்புனைந்து
மெய்யாறும் ஒன்றாக மேவுவித்துச் – செய்ய
முகத்தில் அணைத்துஉச்சி மோந்து முலைப்பால்
அகத்துள் மகிழ்பூத்து அளித்துச் சகத்தளந்த 170

வெள்ளை விடைமேல் விமலன் கரத்தில் அளித்து
உள்ளம் உவப்ப உயர்ந்தோனே – கிள்ளைமொழி
மங்கை சிலம்பின் மணி ஒன்ப தில்தோன்றும்
துங்க மடவார் துயர்தீர்ந்து – தங்கள்
விருப்பால் அளிந்தநவ வீரருக்குள் முன்னோன்
மருப்பாயும் தார்வீர வாகு – நெருப்பிலுதித்து

அங்கன் புவனம் அனைத்தும் அழித்துலவும்
செங்கண் கிடா அதனைச் சென்றுகொணர்ந்து – எங்கோன்
விடுக்குதி என்று உய்ப்பஅதன் மீதிவர்ந்து எண்திக்கும்
நடத்தி விளையாடு நாதா – படைப்போன் 180

அகந்தை உரைப்ப மறை ஆதி எழுத்தொன்று
உகந்த பிரணவத்தின் உண்மை புகன்றிலையால்
சிட்டித் தொழிலதனைச் செய்வதெங்ஙன் என்றுமுனம்
குட்டிச் சிறையிருத்தும் கோமானே மட்டவிழும்
பொன்னம் கடுக்கைப் புரிசடையோன் போற்றிசைப்ப
முன்னம் பிரமம் மொழிந்தோனே கொன்னெடுவேல்
தாரகனும் மாயத் தடங்கிரியும் தூளாக
வீரவடி வேல் விடுத்தோனே – சீரலைவாய்த்
தெள்ளு திரை கொழிக்கும் செந்தூரில் போய்க்கருணை
வெள்ளம் எனத்தவிசின் வீற்றிருந்து – வெள்ளைக் 190

கயேந்திரனுக்கு அஞ்சல் அளித்துக் கடல்சூழ்
மயேந்திரத்தில் புக்கு இமையோர் வாழச் சயேந்திரனாம்
சூரனைச் சோதித்து வருக என்று தடந்தோள்விசய
வீரனைத் தூதாக விடுத்தோனே – காரவுணன்
வானவரை விட்டு வணங்காமை யால்கொடிய
தானவர்கள் நாற்படையும் சங்கரித்துப் – பானுப்
பகைவன் முதலாய பாலருடன் சிங்க
முகனைவென்று வாகை முடித்தோய் – சகமுடுத்த
வாரிதனில் புதிய மாவாய்க் கிடந்தநெடும்
சூருடலம் கீண்ட சுடர் வேலோய் – போரவுணன் 200

அங்கம் இரு கூறாய் அடன்மயிலும் சேவலுமாய்த்
துங்கமுடன் ஆர்த்தெழுந்து தோன்றுதலும் – அங்கவற்றுள்
சீறும் அரவைப் பொருத சித்ரமயில் வாகனமா
ஏறி நடாத்தும் இளையோனே – மாறிவரும்
சேவல் பகையைத் திறல்சேர் பதாகை என
மேவத் தனித்துயர்த்த மேலோனே – மூவர்
குறைமுடித்து விண்ணம் குடியேற்றித் தேவர்
சிறைவிடுத்து ஆட்கொண்டு அளித்ததேவே – மறைமுடிவாம்
சைவக்கொழுந்தே, தவக்கடலே, வானுதவும்
தெய்வக் களிற்றை மணஞ்செய்தோனே – பொய்விரவு 210

காம முனிந்த கலைமுனிவன் கண்ணருளால்
வாமமட மானின் வயிற்றுதித்துப் – பூமருவு
கானக் குறவர் களிகூரப் பூங்குயில்போல்
ஏனற் புனங்காத்து இனிதிருந்து – மேன்மைபெறத்
தெள்ளித் தினைமாவும் தேனும் பரிந்தளித்த
வள்ளிக் கொடியை மணந்தோனே – உள்ளம் உவந்து
ஆறுதிருப்பதிகண்டு ஆறெழுத்தும் அன்பினுடன்
கூறும் அவர் சிந்தைகுடி கொண்டோனே – நாறுமலர்க்
கந்திப் பொதும்பர்எழு காரலைக்கும் சீரலைவாய்ச்
செந்திற் பதிபுரக்குஞ் செவ்வேளே – சந்ததமும் 220

பல்கோடி சன்மப் பகையும் அவமிருத்தும்
பல்கோடி விக்கினமும் பல்பிணியும் – பல்கோடி
பாதகமும் செய்வினையும் பாம்பும் பிசாசும்அடல்
பூதமும்தீ நீரும் பொருபடையும் – தீது அகலா
வெவ்விடமும் துட்ட மிருக முதலாம் எவையும்
எவ்விடம்வந்து எம்மை எதிர்த்தாலும் – அவ்விடத்தில்
பச்சைமயில் வாகனமும் பன்னிரண்டு திண்தோளும்
அச்சம் அகற்றும் அயில்வேலும் – கச்சைத்
திருவரையும் சீறடியும் செங்கையும் ஈராறு
அருள் விழியும் மாமுகங்கள் ஆறும் – விரிகிரணம் 230

சிந்தப் புனைந்த திருமுடிகள் ஓராறும்
எந்தத் திசையும் எதிர்தோன்ற – வந்திடுக்கண்
எல்லாம் பொடிபடுத்தி எவ்வரமும் தந்துபுகுந்து
உல்லாசமாக உளத்திருந்து – பல்விதமாம்
ஆசுமுதல் நாற்கவியும் அட்டாவ தானமும் சீர்ப்
பேசும் இயல் பல்காப் பியத் தொகையும் – ஓசை
எழுத்துமுத லாம் ஐந்து இலக்கணமும் தோய்ந்து
பழுத்த தமிழ்ப்புலமை பாலித்து – ஒழுக்கமுடன்
இம்மைப் பிறப்பில் இருவாதனை அகற்றி
மும்மைப் பெருமலங்கள் மோசித்துத் தம்மைவிடுத்து 240

ஆயும் பழைய அடியாருடன் கூட்டித்
தோயும் பரபோகம் துய்ப்பித்துச் சேய
கடியேற்கும் பூங்கமலக் கால்காட்டி ஆட்கொண்டு
அடியேற்கு முன்னின்று அருள். 244

திருச்செந்தூர் கந்தர் கலிவெண்பா முற்றிற்று

## குமாரஸ்தவம்
## பாம்பன் ஸ்ரீமத் குமரகுருதாச சுவாமிகள்

| | | | |
|---|---|---|---|
| ஓம் சண்முக | பதயே நமோ நம: | ஓம் அஸ்த்ர | பதயே நமோ நம: |
| ஓம் சண்மத | பதயே நமோ நம: | ஓம் சஸ்த்ர | பதயே நமோ நம: |
| ஓம் சட்க்ரீவ | பதயே நமோ நம: | ஓம் ஷஷ்டி | பதயே நமோ நம: |
| ஓம் சட்க்ரீட | பதயே நமோ நம: | ஓம் இஷ்டி | பதயே நமோ நம: |
| ஓம் சட்கோண | பதயே நமோ நம: | ஓம் அபேத | பதயே நமோ நம: |
| ஓம் சட்கோச | பதயே நமோ நம: | ஓம் சுபோத | பதயே நமோ நம: |
| ஓம் நவநிதி | பதயே நமோ நம: | ஓம் (வ்)வியூக | பதயே நமோ நம: |
| ஓம் சுபநிதி | பதயே நமோ நம: | ஓம் மயூர | பதயே நமோ நம: |
| ஓம் நரபதி | பதயே நமோ நம: | ஓம் பூத | பதயே நமோ நம: |
| ஓம் சுரபதி | பதயே நமோ நம: | ஓம் வேத | பதயே நமோ நம: |
| ஓம் நடச்சிவ | பதயே நமோ நம: | ஓம் புராண | பதயே நமோ நம: |
| ஓம் ஷடக்ஷர | பதயே நமோ நம: | ஓம் (ப்)பிராண | பதயே நமோ நம: |
| ஓம் கவிராஜ | பதயே நமோ நம: | ஓம் பக்த | பதயே நமோ நம: |
| ஓம் தபராஜ | பதயே நமோ நம: | ஓம் முக்த | பதயே நமோ நம: |
| ஓம் இகபர | பதயே நமோ நம: | ஓம் அகார | பதயே நமோ நம: |
| ஓம் புகழ்முநி | பதயே நமோ நம: | ஓம் உகார | பதயே நமோ நம: |
| ஓம் ஜய ஜய | பதயே நமோ நம: | ஓம் மகார | பதயே நமோ நம: |
| ஓம் நய நய | பதயே நமோ நம: | ஓம் விகாச | பதயே நமோ நம: |
| ஓம் மஞ்சுள | பதயே நமோ நம: | ஓம் ஆதி | பதயே நமோ நம: |
| ஓம் குஞ்சரீ | பதயே நமோ நம: | ஓம் பூதி | பதயே நமோ நம: |
| ஓம் வல்லீ | பதயே நமோ நம: | ஓம் அமார | பதயே நமோ நம: |
| ஓம் மல்ல | பதயே நமோ நம: 22 | ஓம் குமார | பதயே நமோ நம: 44 |

## பகை கடிதல்
## பாம்பன் ஸ்ரீ குமரகுருதாச சுவாமிகள்

திருவளர் சுடர் உருவே, சிவைசரம் அமர்உருவே,
அருமறை புகழ் உருவே, அறவர்கள் தொழும் உருவே,
இருள்தபும் ஒளி உருவே, எனநினை எனது எதிரே,
குருகுகன் முதல்மயிலே, கொணர்தியுன் இறைவனையே 1

மறைபுகழ் இறைமுனரே, மறைமுதல் பகர்உருவே,
பொறைமலி உலகுஉருவே, புனநடை தரும்உருவே,
இறையிள முகஉருவே, எனநினை எனது எதிரே,
குறைவு அறு திருமயிலே, கொணர்தியுன் இறைவனையே, 2

இதரர்கள் பலர்பொரவே, இவண் உறை எனது எதிரே,
மதிரவி பலஎனதோ், வளர்சரண் இடைஎனமா,
சதுரொடு வருமயிலே, தடவரை அசைவு உறவே,
குதிதரும் ஒருமயிலே, கொணர்தியுன் இறைவனையே 3

பவநடை மனுடர்முனே, படர்உறும் எனது எதிரே,
நவமணி நுதலணியோர், நகைபல மிடறு அணிமால்,
சிவணிய திருமயிலே, திடனொடு நொடிவலமே,
குவலயம் வரும் மயிலே, கொணர்தியுன் இறைவனையே. 4

அழகுஉறு மலர் முகனே, அமரர்கள் பணி குகனே,
மழஉரு உடையவனே, மதி நனி பெரியவனே,
இழவு இலர் இறையவனே, எனநினை எனது எதிரே,
குழகு அது மிளிர்மயிலே, கொணர்தியுன் இறைவனையே. 5

இணை அறும் அறுமுகனே, இதசசி மருமகனே,
இணர் அணி புரள்புயனே, எனநினை எனதுஎதிரே,
கணபண அரவுஉரமே, கலை(வு) உற எழுதரும் ஓர்
குணம்உறு மணிமயிலே கொணர்தியுன் இறைவனையே. 6

எளியவ, என் இறைவ, குகா எனநினை எனதுஎதிரே,
வெளிநிகழ் திரள்களைமீன், மிளிர்சினை எனமிடைவான்,
பளபள எனமினுமா பலசிறை விரிதருநீள்,
குளிர்மணி விழிமயிலே, கொணர்தியுன் இறைவனையே. 7

இலகயில் மயில்முருகா, எனநினை எனதுஎதிரே,
பலபல களமணியே, பலபல பதமணியே,
கலகல கலஎனமா, கவினொடு வரும் மயிலே,
குலவிடு சிகைமயிலே, கொணர்தியுன் இறைவனையே. 8

இகல்அறு சிவகுமரா, எனநினை எனதுஎதிரே,
சுகமுனிவரர் எழில் ஆர் சுரர் பலர் புகழ் செயவே,
தொகுதொகு தொகுஎனவே, சுரநடம் இடும்மயிலே,
குகபதி அமர்மயிலே, கொணர்தியுன் இறைவனையே. 9

கருணைபெய் கனமுகிலே, கடமுனி பணிமுதலே,
அருணையன் அரன்எனவே, அகம்நினை எனதுஎதிரே,
மருமலர் அணிபலவே, மருவிடும் களமயிலே,
குருபல அவிர்மயிலே, கொணர்தியுன் இறைவனையே. 10

(குமாரஸ்தவம் மற்றும் பகை கடிதல் பதிகத்தை காலை மாலை பூசித்துப் பக்தி பிறங்கப் பாடுவோர், திருமயில் மீது செவ்வேட்பரமனைத் தரிசிப்பர். பகையை வெல்வர்)

## சண்முக கவசம்

### பாம்பன் ஸ்ரீமத் குமரகுருதாச சுவாமிகள்

அண்டமாய் அவனியாகி யறியொணாப் பொருள தாகித்
தொண்டர்கள் குருவு மாகிப் துகளறு தெய்வ மாகி
எண்திசை போற்ற நின்ற என்னருள் ஈசனான
திண்திறற் சரவணத்தான் தினமுமென் சிரசைக் காக்க. 1

ஆதியாங் கயிலை செல்வன் அணிநெற்றி தன்னைக் காக்க
தாதவிழ் கடப்பந்தாரான் தான் இரு நுதலைக் காக்க
சோதியாம் தணிகை ஈசன் துரிசிலா விழியைக் காக்க
நாதனாம் கார்த்திகேயன் நாசியை நயந்து காக்க. 2

இருசெவி களையுஞ் செவ்வேள் இயல்புடன் காக்க வாயை
முருகவேள் காக்க நாப்பல் முழுதும் நற்குமரன் காக்க
துரிசறு கதுப்பை யானைத் துண்டனார் துணைவன் காக்க
திருவுடன் பிடரி தன்னைச் சிவசுப்ரமணியன் காக்க. 3

ஈசனாம் வாகுலேயன் எனது கந்தரத்தைக் காக்க
தேசுறு தோள் விலாவுந் திருமகள் மருகன் காக்க
ஆசிலா மார்பை ஈராறு ஆயுதன் காக்க என்றன்
ஏசிலா முழங்கை தன்னை எழிற் குறிஞ்சிக்கோன் காக்க. 4

உறுதியாய் முன்கை தன்னை உமையிள மதலை காக்க
தறுகண் ஏறிடவே என்கைத் தலத்தை மாமுருகன் காக்க
புறங்கையை அயிலோன் காக்க பொறிக்கர விரல்கள் பத்தும்
பிறங்குமால் மருகன் காக்க பின் முதுகைச் சேய் காக்க. 5

ஊணிறை வயிற்றை மஞ்ஞை ஊர்தியோன் காக்க, வம்புத்
தோணிமிர் சுரேசன் உந்திச் சுழியினைக காக்க, குய்ய
நாணினை அங்கி கௌரி நந்தனன் காக்க, பீஜ
ஆணியைக் கந்தன் காக்க, அறுமுகன் குதத்தைக் காக்க. 6

எஞ்சிடாது இடுப்பை வேலுக்கிறைவனார் காக்க காக்க
அஞ்சகனமொர் இரண்டும் அரன்மகன் காக்க காக்க
விஞ்சிடு பொருட் காங்கேயன் விளரடித் தொடையைக் காக்க
செஞ்சர ணேசவாசான் திமிருமுன் தொடையைக் காக்க. 7

ஏரகத் தேவன் என்தாள் இருமுழங் காலுங் காக்க
சீருடைக் கணைக்கால் தன்னைச் சீரலைவாய்த் தே காக்க
நேருடைப் பரடி ரண்டு நிகழ் பரங்கிரியன் காக்க
சீரிய குதிக்கால் தன்னைத் திருச்சோலை மலையன் காக்க. 8

ஐயுறு மலையன் பாதத் தமர்பத்து விரலுங் காக்க
பையுறு பழநி நாத பரன் அகங் காலை காக்க
மெய்யுடல் முழுதும் ஆதி விமல சண்முகவன் காக்க
தெய்வநாயக விசாகன் தினமும் என் நெஞ்சைக் காக்க. 9

ஒலியெழ வுரத்த சத்தத் தொடுவரு பூதப் ரேதம்
பலிகொளி ராக்கதப் பேய் பலகணத்து எவையானாலும்
கிலிகொள எனை வேல் காக்க, கெடுபரர் செய்யுஞ் சூன்யம்
வலியுள மந்த்ர தந்தரம் வருத்திடாது அயில்வேல் காக்க. 10

ஓங்கிய சீற்றமே கொண்டு வணிவில் வேல் சூலங்கள்
தாங்கிய தண்ட மெஃகந் தடிபரசு ஈட்டி யாதி
பாங்குடை ஆயுதங்கள் பகைவர் என் மேலே யோச்சின்
தீங்கு செய்யாமல் என்னைத் திருக்கைவேல் காக்க காக்க. 11

ஔவியம் உளர் ஊண்உண்போர் அசுடர் பேய் அரக்கர் புல்லர்
தெவ்வர்கள் எவரா னாலும் திடமுடன் எனைமற் கட்டத்
தவ்வியே வருவா ராயின் சராசரமெலாம் புரக்கும்
கவ்வுடைச் சூர சண்டன் கைஅயில் காக்க காக்க. 12

கடுவிடப் பாந்தள் சிங்கம் கரடிநாய் புலிமா யானை
கொடியகோ ணாய் குரங்கு கோல மார்ச்சாலஞ் சம்பு
நடையுடை யெதனா லேனும் நான் இடர்ப் பட்டிடாமற்
சடிதியில் வடிவேல் காக்க, சானவி முளைவேல் காக்க. 13

ஙகரமே போற்ற ஸ்ரீஇ ஞானவேல் காக்க வன்புள்
சிகரிதேள் நண்டுக் காலி செய்யன்ஏறு ஆலப் பல்லி
நகமுடை யோந்நி பூரா னளிவண்டு புலியின் பூச்சி
உகமிசை யிவையால் எற்கோர் ஊறுஇலாது ஐவேல் காக்க. 14

சலத்திலுய் வன்மீ னேறு தண்டுடைத் திருக்கை மற்றும்
நிலத்திலும் சலத்திலும் தான் நெடுந்துயர் தரற்கே யுள்ள
குலத்தினால் நான் வருத்தங் கொண்டிடாது அவ்வவ் வேளை
பலத்துட னிருந்து காக்க பாவகி கூர்வேல் காக்க. 15

**ஞ**மலியம் பரியன் கைவேல் நவக்கிரகக்கோள் காக்க
சுமவிழி நோய்கடந்த சூலையாக் கிராணரோகம்
திமிர்கழல் வாதஞ் சோகை சிரமடி கர்ண ரோகம்
எமையணு காமலே பன்னிருபுயன் சயவேல் காக்க. 16

**ட**மருகத் தடிபோல் நைக்கும் தலையிடி கண்ட மாலை
குமுறுவிப் புருதி குன்மம் குடல்வலி யீழை காசம்
நிமிரொணா திருத்தும் வெட்டை நீர்ப் பிர மேக மெல்லாம்
எமையடை யாமலே குன்றெறிந்தவன் கைவேல் காக்க. 17

**இண**க்கமில் லாத பித்த வெரிவுமா சுரங்கள் கைகால்
முணக்கவே குறைக்குங் குஷ்ட மூலவெண் முளைதீ மந்தம்
சணத்திலே கொல்லுஞ் சன்னி சாலமென் றறையும் இந்தப்
பிணிக்குலம் எனையாளாமல் பெருஞ்சத்தி வடிவேல் காக்க. 18

**த**வனமா ரோகம் வாதஞ் சயித்திய மரோசகம் மெய்
சுவறவே செய்யு மூலச்சுடு இளைப்பு உடற்று விக்கல்
அவதிசெய் பேதி சீழ்நோய் அண்டவாதங்கள் சூலை
எவையும் என்னிடத்தெய்தாமல் எம்பிரான் திணிவேல் காக்க. 19

**ந**மைப்புறு கிரந்தி வீக்க நணுகிடு பாண்டு சோபம்
அமர்த்திடு கருமை வெண்மை ஆகு பல்தொழுநோய் கக்கல்
இமைக்கு முன்உறு வலிப்போடு எழுபுடைப் பகந்த ராதி
இமைப் பொழுதேனும் என்னைஎய்தாமல் அருள்வேல் காக்க. 20

**ப**ல்லது கடித்து மீசை படபடென்றே துடிக்கக்
கல்லினும் வலிய நெஞ்சம் காட்டியே உருட்டி நோக்கி
எல்லினும் கரிய மேனி எமபடர் வரினும் என்னை
ஒல்லையில் தாரகாரி ஓம்ஐம் ரீம்வேல் காக்க. 21

**ம**ண்ணிலு மரத்தின் மீதும் மலையிலும் நெருப்பின் மீதும்
தண்ணிறை ஜலத்தின் மீதும் சாரிசெய் ஊர்தி மீதும்
விண்ணிலும் பிலத்தினுள்ளும் வேறெந்த இடத்தும் என்னை
நண்ணி வந்தருளார் சஷ்டிநாதன் வேல் காக்க காக்க. 22

**ய**கரமே போற்சூல்ஏந்தும் நறும்புயன் வேல் முன் காக்க
அகரமே முதலாம் ஈராறு அம்பகன் வேல் பின் காக்க
சகரமோடு ஆறும் ஆனோன் தன்கை வேல் நடுவில் காக்க
சிகரமின் தேவ மோலி திகழை வேல் கீழ்மேல் காக்க. 23

ரஞ்சித மொழி தேவானை நாயகன் வள்ளி பங்கன்
செஞ்சய வேல் கிழக்கில் திடமுடன் காக்க அங்கி
விஞ்சிடு திசையில் ஞான வீரன்வேல் காக்க தெற்கில்
எஞ்சிடாக் கதிர்காமத்தோன் இகலுடைக் கரவேல் காக்க. 24

**ல**கரமே போல் காளிங்கன் நல்லுடன் நெளிய நின்று
தகரமர்த் தனமே செய்த சங்கரி மருகன் கைவேல்
நிகழெனை நிருதி திக்கில் நிலைபெறக் காக்க மேற்கில்
இகலயில் காக்க வாயுவினில் குகன் கதிர்வேல் காக்க. 25

**வ**டதிசை தன்னில் ஈசன் மகன்அருள் திருவேல் காக்க
விடையுடை யீசன் றிக்கில் வேதபோ தகன்வேல் காக்க
நடக்கையி லிருக்கு ஞான்று நவில்கையி னிமிர்கை யிற்கீழ்க்
கிடக்கையிற் றூங்கு ஞான்று கிரிதுளைத் துளவேல் காக்க. 26

**இ**ழந்துபோகாத வாழ்வை ஈயும் முத்தையனார் கைவேல்
வழங்குநல்லூணுன் போது மால் விளையாட்டின் போதும்
பழஞ்சுரர் போற்றும் பாதம் பணிந்து நெஞ்சடக்கும் போதும்
செழுங்குணத்தோடே காக்க திடமுடன் மயிலும் காக்க. 27

**இ**ளமையில் வாலிபத்தில் ஏறிடு வயோதிகத்தில்
வளர் அறுமுகச்சிவன் தான் வந்தெனைக் காக்க காக்க
ஒளியெழு காலை முன்எல் ஓம் சிவசாமி காக்க
தெளிநடு பிற்பகற்கால் சிவகுரு நாதன் காக்க. 28

**இ**றகுடைக் கோழித் தோகைக்கு இறை முன்இராவிற் காக்க
திறலுடைச் சூர்ப்ப கைத்தே திகழ்பின் இராவிற் காக்க
நறவுசேர் தாள் சிலம்பன் நடுநிசி தன்னிற் காக்க
மறைதொழு குழகன் எம்கோன் மாறாது காக்க காக்க. 29

**இ**னமெனத் தொண்டரோடு இணக்கிடும் செட்டி காக்க
தனிமையில் கூட்டந் தன்னில் சரவண பவனார் காக்க
நனி அனுபூதி சொன்ன நாதற்கோன் காக்க இத்தைக்
கனிவொடு சொன்ன தாசன் கடவுள்தான் காக்க வந்தே. 30

சண்முக கவசம் முற்றிற்று.

**இதனை விசுவாசத்துடன் நாள் ஒன்றுக்கு ஆறுமுறை படிப்பவர்கள் எத்தகைய துன்பத்தினின்றும் விடுதலை பெறுவார்கள். முடிவில் முக்தியுமடைவார்கள். கவசச் செய்யுள்களுட் சிலவற்றை விட்டு சிலவற்றைக் கூறலும், இடையில் எவரோடேனும் பேசலுங் கூடாது. முன்பின் மாறிப் படித்தலுமாகாது. மந்திர மாறுபாடு போல விபரீதமாதலின்....**

## சைதை, செங்குந்தக் கோட்டம்,
## சிவசுப்ரமணியப் பதிகம் - கவிமாமணி ஐயாறப்பன்

நெஞ்சார நின்னை நினைப்பவர் தம்முளே
நின்றிடும் முருக வேளே
அஞ்சல் என்று எவரையும் அளிசெய்து காத்திடும்
அன்பான தெய்வம் நீயே
பஞ்சிலே தீயெனப் பற்றிய வயிற்று நோய்
பரமனே தீர்த் தருளுவாய்
தஞ்சமே நின்பாதம் சரணம் சரண் சைதைத்
தலம் வளர் சுப்ரமணியே. 1

நின்பாதம் பற்றியே நிற்பவன் அல்லனோ
நீ அருள வேண்டுமையா
முன்பேதும் நான் உன்னை முற்றும் மறந்தேனோ
முனியாது காக்க வேண்டும்
என்பாதை வயிற்றிலே எடுத்துனக்கு இயம்பவோ
எற்றிடு வைத்ய நாதா
அன்பான தமிழனுக்கு அசைந்தாடும் முருகனே
சைதை வளர் சுப்ரமணியே. 2

அசைகின்ற மாமனிச் சுடரெலாம் விண்ணிலே
ஆரமாய் அணிந்த அழகா
விசையாக மேகத்தில் வெட்டெனப் படர்ந்திடும்
மின்னலைப் பழித்த வேலா
அசையாமல் உள்ளிருந்து அலட்டிப் புடைக்கும் வலி
ஐயனே போக்க வருவாய்
இசையான தமிழுக்கு இளகியே வருகுவோய்
சைதை வளர் சுப்ரமணியே. 3

இளைஞனே செல்வனே என்னாசைக் குழவியே
ஏறி மயில்மீதில் வருவாய்
தளர்வுற்று இளைப்பாற தண்நிழல் கொடுக்க நீ
தருக்களாய்த் தழைந்து நிற்பாய்
உளமாற உன்றனைப் போற்றக் குறுக்கிடும்
குடல்நோயைத் தீரும் ஐயா
வளமான தமிழுக்கு வாயூறல் சிந்திடும்
சைதை வளர் சுப்ரமணியே. 4

சித்தித்துனைப் போற்றிச் சிறுபோழ்து இருந்தாலும்
சித்தி பலதந்து அருளுவாய்

நிந்தித்து இருந்தாலும் நின்தாள் அடைக்கலம்
நீகாக்க வேண்டும் ஐயா
செந்தீ படர்ந்தன்ன சிறியனேன் வயிற்றினில்
சேர்ந்தவலி போக்க வருவாய்
சிந்து என்ற பண்ணுக்குத் திந்திம்மென்று ஆடிவரும்
சைதை வளர் சுப்ரமணியே. 5

ஆடிவரு தோகையும் அங்கையில் வேலுமுடன்
அண்டம் புரக்க வருவாய்
சாடிவரு சூரனைச் சண்டப் ப்ரசண்டனாய்
சங்கரித் திடு வீரனே
பாடியுன் பாதத்தைப் பற்றினேன் என்குடல்
பாதையினை நீக்க வருவாய்
தேடியே தமிழுக்கு நெஞ்சைக் கொடுத்திடும்
சைதை வளர் சுப்பிரமணியே. 6

கொடுத்திட வல்லநின் கொடையின் திறத்திற்குக்
கொண்டலும் நிகராகுமோ
அடுத்துனை வந்தவர்க்கு அருள்செயும் முருகனே
அல்லலைக் கலையும் வேலா
முடக்கிப்பிழிந்திடும் மோசக் குடல் நோயை
முத்தனே நீக்க வருவாய்
குடிக்கத் தமிழ்த்தேனைத் துடிக்கும் கடம்பனே
சைதை வளர் சுப்ரமணியே. 7

தேனாய் இனிக்குமே தீர்தமிழ்க் கிழவநின்
திருநாமம் அமிழ்தம் அன்றோ
மான் நாடுவாய் வள்ளி மனம்நாடுவாய் கான
மறவ ரோடு ஆடவன்றோ
யான் ஏது செய்குவேன் என்குடல் நோகுதே
ஈசனே காக்க வருவாய்
வானோர் புகழ்ந்து ஏத்தும் வண் தமிழ்த் தெய்வமே
சைதை வளர் சுப்பிரமணியே. 8

தெய்வம்நீ என்றுனைத் தேடிப்பிடித்து என்றன்
நெஞ்சுளே கொண்டுவிட்டேன்
உய்யநீ கொண்டாலும் ஒதுக்கியே விட்டாலும்
உனக்கதே பாரம் அப்பா
வெய்யவென் கும்பியில் வேகாமல் வேகுதே
வெம்மை தீர்த்து ஆளும் அப்பா
ஐயனே செந்தமிழ்த்துய்யனே சென்னையில்
சைதை வளர் சுப்பிரமணியே. 9

சென்னிஉன் பாதத்தில் சேர்த்தவர்க்கு அல்லாமல்
திகழுமோ கல்வி ஞானம்
தன்வினை நீங்குமோ தழைக்குமோ செல்லமும்
தங்கமயில் மேல் வருகுவோய்
மின்நிகர் வேல்கொண்டு வேதிக்க என் குடல்
விளங்கவே செய்த புனிதா
பன்னும் என் தமிழையும் மந்திரம் என்றனை
சைதை வளர் சுப்பிரமணியே. 10

சிவசுப்ரமண்யர் பதிகம் முற்றிற்று

## சைதை, செங்குந்தக் கோட்டம், சிவசுப்ரமணியர் சர்க்கரை நோயை தீர்க்கும் பதிகம்
### - கவிமாமணி ஐயாறப்பன்

ஓஓ நோயே நீங்கிவிடு
உடனே காணாது ஏகி விடு
தீயின் கங்காய்க் குகன் வருகின்றான்
தீயில் கருகாது ஏகிவிடு
நாயும் கூட நன்றியைக் காட்டி
நாளும் வீட்டைக் காக்க வரும்
போயும் போயும் உனை வளர்த்தேனே
புண்ணாய்த் தோன்றிக் கடிக்கின்றாய் 1

ஆறு சுவைகளில் அருஞ்சுவை யாக
அனைத்து விருந்திலும் தலைமை யிடம்
மாறாது உன்னை ஆராதித்தேன்
மனதில் உன்னையே மதித்தேனே
கூறும் தமிழையும் இன்தமிழ் என்றேன்
கூசாது என்னை அரிக்கின்றாய்
ஆறு முகத்தான் பேரைப் பதித்தேன்
அடியோடு என்னை நீங்கிவிடு 2

கனியில் தேனில் மருந்து உண்டு என்று
கண்ட போதிலும் உண்டு விட்டேன்
பனியிலும் ஐஸ் கிரீம் பெருமிதமாக
பாட்டி என்று அழைத்தால் போய்வருவேன்
நுனிவாய் வரையில் இனித்து இருந்தே என்
உள்ளே கசப்பை வளர்த்து விட்டாய்
தனி வேல் முருகன் இருக்கின்றான் அவன்
தார் உதை பெருமுன் ஓடிவிடு 3

கசப்பு மருந்தை உள் வைத்தே அது
காணாமல் மேல் இனிப்பு இடுவார்
அசப்பில் சர்க்கரைக் கட்டி என்று அதையே
அள்ளித் தின்றது நினைக்கின்றேன்
கசப்பு மருந்து கரைந்துவிடும் நீ
காலகாலமாய் நின்றுவிட்டாய்
கசப்பின் எதிரியே சர்க்கரையே என்
கந்தன் வருகிறான் ஓடிவிடு 4

உடைமை எனக்குத் துணிமணிகள்
உடுத்திக் கொள்ளைச் சேர்த்து வைத்தேன்
திடமாய் உழைத்துக் குடியிருக்க
தெருவில் வீட்டைக் கட்டி வைத்தேன்
கொடுமை உன்னையும் தெரியாமல்
உள்ளுக்குள்ளே வளர்த்து விட்டேன்
மடமை உணர்ந்து கூறுகிறேன் என்
வடிவேல் வருமுன் ஓடிவிடு 5

நடக்கும் போதே முட்டி வலி என்
நடையில் சோர்வை உணர்கின்றேன்
இடக் கால் ஒருபுறம் வலிக்கிறது – அவ்
வலக்கால் உடம்பை வலிக்கிறது
முடக்கம் தோன்று முன் கண்டுகொண்டேன் இனி
முழுதும் இனிப்பை மறந்து விட்டேன்.
அடக்கிப் பொடிப்பான் என் முருகன்
அன்பே நோயே அடங்கிவிடு 6

வயிற்றில் தோன்றிய பெரு வலியை – எனை
வாட்டிக் களித்த வினை நோயை
வயித்தியம் பார்த்தும் தீராமல் – என்
வடிவேல் முருகனை மனம் கொண்டேன்
இயற்றிய பத்தாம் பாட்டுக்குள் – வலி
இல்லாதபடி அவன் தீர்த்தான்
மயக்கும் மாயச் சர்க்கரையே – நான்
மறுபடி அவனை எண்ணுகிறேன். 7

நேற்றைக்கு இருந்த தள்ளாட்டம் – ஒரு
நிழலைக் கூடக் காணாமல்
மாற்றம் காண்கிறேன் அவன் அருளால்
மறுபடி என்னை அணுகாதே
சீற்றம் கொண்டாய் மிகப் பொல்லான்
சிதறடிக்காமல் அவன் நில்லான்

பிற்றைச் சருக்கரைச் சிறுநாயே என்
பெருமான் வருமுன் ஓடிவிடு. 8

தளர்வுக்குக் காரணம் வயதல்ல உடல்
தன்னுழைப் பாலே மாற்றி விட்டேன்
களைப்புக்குக் காரணம் நோயல்ல என்
கந்தனைப் போற்றி எழுந்துவிட்டேன்
அளவுக்கு மீறிய அமிர்தமென – எனை
ஆட்டிப் புடைத்திட வந்து நின்றாய்
பழிமிக்க சருக்கரைக் கொடுநோயே
பக்கம் திரும்பாமல் ஓடிவிடு. 9

வேலுண்டு கையிலே வினை தீர்க்கவே – அவன்
விழியுண்டு பார்வையில் களை நீக்கவே
காலுண்டு எனக்குள்ளே களித்தாடவே – அவன்
கால்மணிச் சதங்கைகள் ஜதி பாடவே –
நூல் உண்டு அவன் பெருமை நான் பாடவே – இந்த
நோன்பிற்கு எவர் மனமும் களிகூடவே
பாலுண்டு தேனுண்டு அபிசேகமாய் – மனம்
பாட்டிலே அவன் ஓடி விளையாடவே. 10

(இந்த பாடலும் சைதை, செங்குந்த கோட்டத்து சிவசுப்பிரமணியரை நினைத்து ஆசிரியரால் இயற்றப்பெற்றது. எளிதில் தீராத சர்க்கரை நோய் நவம்பர்'95ல் ஆசிரியருக்குத் தோன்றியது. உள்ளுக்குள்ளேயே இரத்தத்தில் கலந்து காலில் சீழ்க் கட்டியாக வளர்ந்தது. திருமுருகக் கடவுளை எண்ணி இயற்றிய இந்த மந்திர கவிதையால் பாடிய மூன்றே நாட்களில் பூரணகுணம் ஏற்பட்டுக் கட்டி மறைந்துவிட்டது. கோவிலுக்குள் சந்நிதியைச் சுற்றும்போதே பாடியது பாடல். மந்திரம் என்பது வெறும் எழுத்தில் இல்லை. நாம் கொண்ட நம்பிக்கை, ஆழ்ந்த பக்தி, எழுத்து, சொல், பதம் எல்லாவற்றிலும் உள்ளது.)

## போற்றி விண்ணப்பம் - பாம்பன் ஸ்ரீ குமரகுருதாசர்

ஐயனே யரசே போற்றி யருமறைப் பொருளே போற்றி
துய்யனே துணையே போற்றி தூமணித் திரளே போற்றி
மெய்யருள் விளைவே போற்றி வெற்றிவே லேந்து பூவற்
கையனே போற்றி யெங்கள் கடவுளே போற்றி போற்றி. 1

போற்றுவிண் ணவர்கோன் போற்றி புரிதவத் தொண்டர்க் கின்பம்
ஆற்றுநல் லழகன் போற்றி யாடுமம் பரியோன் போற்றி
நீற்றினைப் புனைந்த மேனி நிலவருட் குன்றம் போற்றி
சீற்றமெம் மேற்கொ ளாவோர் சிவசுப்பிர மணியம் போற்றி. 2

மணியணி மால்வி ரிஞ்சன் மற்றுள கணங்கள் யாவும்
பணியநின் றவனே போற்றி பரமனே போற்றி யன்பர்
அணியடி யலரே போற்றி யாக்கிநன் களித்து மாய்க்குங்
குணமுடை யத்தா போற்றி குமரவேள் போற்றி போற்றி. 3

போற்றிவந் தாளு முன்றன் பொன்னடிக் கமலம் போற்றி
தேற்றுவா ருன்னை யல்லாற் றிக்குவே றில்லை போற்றி
மாற்றரும் பிறவிக் காட்டை மடிக்கமெய்ஞ் ஞானத் தீயை
ஏற்றுமெஃகுடையாய் போற்றி யெங்குறை தவிர்ப்பாய் போற்றி.4

பாய்நதிக் கிடையோன் வாம பாகமே கொண்ட டன்னைத்
தாயென வுவந்தாய் போற்றி தனிப்பரஞ் சுடரே போற்றி
வீயிலாப் புத்தேண் மாதை வேட்டுமற் றொருத்திக் கன்று
நாயக னானாய் போற்றி நான்மறை முதல்வா போற்றி. 5

முதலுமாய் நாப்ப ணாகி முடிவுமாய் நின்றாய் போற்றி
சததள பாதா போற்றி சகச்சிர நாமா போற்றி
மதிபுனை பரமனார்க்கு மதலையாய்க் குருவாய்த் தேவர்
பதியென வுளவேள் போற்றி பரஞ்சுடர்க் கண்ணா போற்றி. 6

கண்ணுமாய்க் கருத்து மாகிக் காணெழி லெந்தை போற்றி
விண்ணுமாய் மண்ணு மாகி விளங்கருட் டேவே போற்றி
பண்ணவர்க் கருளத் தண்ட பாணியா நின்றாய் போற்றி
தண்ணருட் கடலே போற்றி சதுர்முகற் கிறைவா போற்றி 7

இறைவனே போற்றி யாதி யெந்தையே போற்றி வேலுக்
கிறைவனே போற்றி நீப விணரணி சிவனே போற்றி
மறைபுக லரிய வெங்கண் மாதவ மணியே போற்றி
குறைவறு நிறைவே போற்றி குளிர்சிவக் கொழுந்தே போற்றி. 8

கொழுமையிற் குளிர்மை போற்றி குக்குடக் கொடியாய் போற்றி
குழுமிய சிவக ணங்கள் கும்பிடுங் கழலாய் போற்றி
தொழுபவர்க் கருள்வோய் போற்றி சுந்தரா போற்றி யென்னை
முழுதுமாள் பவனே போற்றி மோனநா யகனே போற்றி. 9

நாயக மானார்க் கெல்லா நாயக மானாய் போற்றி
தாயென வருவாய் போற்றி சண்முகத் தரசே போற்றி
தீயரிப் பெயரோற் கன்று தெய்வமுங் குருவு மான
நீயெனைக் கலந்தாள் போற்றி நித்தனே போற்றி போற்றி. 10





## ஸ்ரீ சனீஸ்வர பகவான் துதி

தேவரெண் டிசைக்கதிபர் சித்தரொடு கிம்புருடர்
மூவர் முனிவர் முதலோரை – மேவியுறுந்
தாரணிந்த மார்பன் சனிபகவான் கதை புகலக்
காரணிந்த யானைமுகன் காப்பு.

ஆதி வேதாந்த முதல் அரிய ஞானம்
ஐந்தெழுத்தினுட் பொருளை அயன் மாலோடும்
சோதி சிற்றம்பலத் தாடி நின்ற
சுடரொளியை நீ பிடித்த தோஷத்தாலே
பாதிமதி சடைக்கணிய அரவம்பூண்
பதியிழக்கச் சுடலைதனிற் பாடியாடச்
சாதியிலா வேடனே னிறைச்சித் தின்னவைத்தாய்
சனியனே காகமேறும் தம்பிரானே ! 1

வேலவனை வேங்கை மரமாக்கி வைத்தாய் !
விறகுகட்டிச் சொக்கர்தமைச் சுமக்க வைத்தாய் !
மாலினையே யுரலோடு கட்டுவித்தாய் !
வள்ளிதனைக் குறவரது வனத்தில் வைத்தாய் !
காலனை மார்க்கண்டனுக்காக அரனுதைத்த
காரணமும் நீ பிடித்த கருமத்தாலே !
சாலவுனை யான்றொழுதேன் எனைத் தொடாதே !
சனியனே காகமேறுந் தம்பிரானே ! 2

மஞ்சு தவழ் அயோத்தியில் வாழ் தசரதன்றன்
மக்களையும் வனவாசமாக்கி வைத்தாய் !
பஞ்சவர்கள் சூதினால் பதியிழந்து
பஞ்சுபடும் பாட்டையவர் படச் செய்வித்தாய் !
எஞ்சலிலாவ் அரிச்சந்திரன் பெண்டை விற்றே
இழிகுலத்தி லடிமையுற இசைய வைத்தாய் !
தஞ்சமென வுனைப்பணிந்தேன் எனைத் தொடாதே !
சனியனே காகமேறுந் தம்பிரானே ! 3

அண்டமா யிரத்தெட்டும் அரசு செய்த
அடல் சூரபத்மனையும் அடக்கி வைத்தாய் !
மண்டலத்தை யாண்ட நளச் சக்கரவர்த்தி
மனைவியோடு வனமதனி லலையச் செய்தாய் !
விண்டலத்தை பானு கோபன்றன்னாலே
வெந்தணலாய்ச் சூரரை வெருவச் செய்தாய் !

தெண்டமிட்டேன் எந்நாளும் எனைத் தொடாதே!
சனியனே காகமேறுந் தம்பிரானே! 4

அண்டர்கோன் மேனியிற் கண்ணாக்கி வைத்தாய்!
அயன் சிரத்தை வயிரவனால் அறுக்க வைத்தாய்!
திண்டிறல் கொள் கௌதமனால் அகலிகைதான்
சிலையாகவே சாபமுறவே செய்தாய்!
தண்டரள நகையிரதி மாரன்றன்னை
சங்கரனார் நுதல் விழியிற் றணல் செய்வித்தாய்!
கண்டமிலா துனைத் தொழுதேன் எனைத் தொடாதே!
சனியனே காகமேறுந் தம்பிரானே! 5

பாருலவு பரிதியைப் பல்லுதிர வைத்தாய்!
பஞ்சவர்க் குத்தூது பீதாம்பரனை வைத்தாய்!
தாருலவும் வாலீ சுக்ரீவன் தம்மைத்
தாரையினால் தீராத சமர் செய்வித்தாய்!
சூரனெனு மிலங்கை ராவணன் றன்தங்கை
சூர்ப்பனகை மூக்குமுலை துணி செய்வித்தாய்!
தாரணியும் அணிமார்பா எனைத் தொடாதே!
சனியனே காகமேறுந் தம்பிரானே! 6

சுக்கிரன் தன் கண்ணிழந்தான் லங்கையாண்டு
துலங்கும் ராவணன் சிரங்கண்டிக்க விழ்ந்தான்!
மிக்கபுகழ் இரணி யன்றான் வீறழிந்தான்!
விளங்கு திரிபுராதிகளும் வெந்து மாண்டார்!
சக்கரத் தாலுடறுந்தான் சலந்திரன்றான்
தாருகாசுரனுமே சமரில் மாண்டான்!
தக்கன் மிகச் சிரமிழந்தான் நின்தோஷத்தாலே!
சனியனே காகமேறுந் தம்பிரானே! 7

அந்தமுள ஐங்கரன் கொம்பறவே செய்தாய்!
அறுமுனிவர் மனைவிகள் கற்பழியச் செய்தாய்!
சந்திரன் தன் கலையழிந்து தழைக்கச் செய்தாய்!
சங்கரனைப் பிச்சை தானெடுக்கச் செய்தாய்!
தந்திமுகா சூரனுயிர் தளரச்செய்தாய்!
சாரங்கதரன் கரத்தைத் தறிக்கச் செய்தாய்!
சந்ததமும் உனைப்பணி வேன் எனைத் தொடாதே!
சனியனே காகமேறுந் தம்பிரானே! 8

சீதைதனை இராவணனாற் சிறை செய்வித்தாய்!
தேவர்களைச் சூரனாற் சிறை செய்வித்தாய்!

மாது துரோபதை துகிலை வாங்குவித்தாய்!
மகேச்வரனை யுமைபிரியும் வகை செய்வித்தாய்!
போதிலயன்றாளி ற்றளை பூட்டுவித்தாய் !
பொதிகையி னிலகத்தியனைப் பொருந்தச் செய்தாய்!
தாதுசேர் மலர்மார்பா வெனைத் தொடாதே!
சனியனே காகமேறுந் தம்பிரானே! 9

தப்பான வன்னெஞ்சரை வணங்க வைத்தாய்!
தண்மையான அடியாரை வாழ வைத்தாய்!
அப்பர்தமைக் கருங்கல்லோ டலையிற் சேர்த்தாய்!
அரனடியில் முயலகனை யடங்கச் செய்தாய்!
ஒப்பிலனுமான் வாலு லொளி தீயிட்டாய்!
ஒலிகடலி னஞ்சையரன் உண்ண வைத்தாய்!
தப்பிலாது உனைத் தொழுதேன் எனைத் தொடாதே!
சனியனே காகமேறுந் தம்பிரானே! 10

நீரினையுண்டு எழுமேக வண்ணா போற்றி!
நெடுந் தபத்திலறு கமலக்கண்ணா போற்றி!
சூரியனின் தவத்தில் வந்த பாலா போற்றி!
துலங்கு நவக்கிரகத்துள் மேலா போற்றி!
காரியன் பெயர்கள் உபகாரா போற்றி!
காசினியிற் கீர்த்தி பெற்ற தீரா போற்றி !
மூரிகொளு நோய்முக முடவா போற்றி!
முதுமுகனின் முண்டகத் தாள் போற்றி! போற்றி!! 11



(ஆண்டவனின் அருள் ஆணைப்படி அண்டங்களை ஆண்டு வரும் நவகிரகங்களில் ஸ்ரீ சனிஸ்வரர் மிகவும் நியாயமானவர். நல்லவர்களுக்கு நன்மையும், அல்லாதவர்களுக்கு அல்லாததையும் செய்வதில் இவர் ஆண்டவனுக்கு இணை. அதனால் அன்றோ "ஈஸ்வர பட்டம்" பெற்று "சனீஸ்வரர்" ஆனார். இவர் பார்வை பட்டாலே நமக்கு துன்பம் என்பது அறிவீனம். ஒரு தாய் தன் மகனை பார்க்கும் பார்வையும், தன் மகனுக்கு வரும் ஆபத்தை பார்க்கும் பார்வையும் ஒன்றா ? இவர் அடியார்களை காக்கவே அமர்த்தப்பட்டார். எனவே நாம் அவரின் அருட்பார்வை நம் மேல் படவேண்டும் என்று வேண்டுவோம். மேலும் இவர் மிகவும் பிரயாதணப்பட்டு இம்மாபெரும் நிலையை அடைந்தவர். அதனால் நியாயமாக, கஷ்டபட்டு, உழைத்து முன்னேற துடிப்பவர்களுக்கு இவர் ஏணியாக இருந்து ஏற்றம் கொடுத்து துணை செய்வார் என்பதில் எள்ளளவும் சந்தேகமில்லை. முக்கிய நிகழ்ச்சிகளை துவக்கும் முன்பும், பயணம் செய்யும்போதும் இந்த பாடலை மனதிற்குள் சொல்லலாம். பொதுவாக கோயிலில் சனீஸ்வரன் சந்நிதியில் அல்லது வீட்டு பூஜையறையில் இந்த பாடலை கூறி வணங்கிவிட்டு புறப்படுவதால் தடை, தடங்கல், விவகாரம் இன்றி சிறப்புற அமையும்.)

# வாழ்த்து

## ஞாயிற்றுக்கிழமை

பண்டுவிண்ணோர் குலம்வாழ புரந்து, பழநியில் ஓர்
தண்டுடன் நின்று விளையாடிடும், மான்புடை சற்குரவர்
கண்டு தொழுது துதிபாடி, நெஞ்சில் கருதி, உண்மை
தொண்டு செய்வார்க்கு அவன் வேலும் மயிலும் துணை செய்யுமே.

விழுமிய பொருளாய் நாளும் மிளிர் குகக்கடவுள் வாழ்க!
குழுமிய தொழும்பர் வாழ்க! குருவுடன் சீடர் வாழ்க!
தொழுகுலத் தவர்கள் வாழ்க! துகளறு தவங்கள் வாழ்க!
வழுவறு மறையும் ஆகமமும் சொன்ன முடிவு வாழ்க!

பன்னிரு தடந்தோள் எந்தை பாதமென் கமலம் வாழ்க!
தென்னவிர் திருவ தேவசேனையங் குறமின் வாழ்க!
மின்னயி னவிரம் வாழ்க! வியன்அருணகிரி வாழ்க!
பன்னருட் குரவர் வாழ்க! பரிவுடைச் சீடர் வாழ்க!

### திருமந்திரம் - ஸ்ரீ திருமூலர்

வாழ்கவே வாழ்க என் நந்தி திருவடி
வாழ்கவே வாழ்க மலமறுத்தான் பதம்
வாழ்கவே வாழ்க மெய்ஞ்ஞானத்தவன் தாள்
வாழ்கவே வாழ்க மலமிலான் பாதமே.

### கந்தபுராணம் - ஸ்ரீ கச்சியப்பர்

வான்முகில் வழாது பெய்க! மலிவளம் சுரக்க, மன்னன்
கோன்முறை அரசு செய்க! குறைவிலாது உயிர்கள் வாழ்க!
நான்மறை அறங்கள் ஓங்க ! நற்றவம் வேள்வி மல்க!
மேன்மை கொள் சைவ நீதி விளங்குக உலகம் எல்லாம்.

### திங்கட்கிழமை - திருப்பாசுரம் - ஸ்ரீ திருஞான சம்பந்தர்

வாழ்க அந்தணர், வானவர், ஆன்இனம்!
வீழ்க தண்புனல்! வேந்தனும் ஓங்குக!
ஆழ்க தீயது! எல்லாம் அரன் நாமமே
சூழ்க! வையகமும் துயர் தீர்கவே.

**செவ்வாய்க்கிழமை - கந்தபுராணம் - ஸ்ரீ கச்சியப்பர்**

ஆறிரு தடந்தோள் வாழ்க!
அறுமுகம் வாழ்க! வெற்பைக்
கூறுசெய் தனிவேல் வாழ்க!
குக்குடம் வாழ்க! செவ்வேள்
ஏறிய மஞ்ஞை வாழ்க!
யானைதன் அணங்கு வாழ்க!
மாறுஇலா வள்ளி வாழ்க!
வாழ்க சீர் அடியார் எல்லாம்!

**புதன்கிழமை - கந்தபுராணம் - ஸ்ரீ கச்சியப்பர்**

ஆவதோர் காலை எந்தை ஆறிரு தடந்தோள் வாழ்க!
மூவிரு வதனம் வாழ்க! முழுதருள் விழிகள் வாழ்க!
தூவுடை நெடுவேல் வாழ்க! தொல்படை பிறவும் வாழ்க!
தேவர்கள் தேவன் சேயோன் திருவடி வாழ்க! (என்றான்)

**வியாழக்கிழமை - கந்தர் அனுபூதி - ஸ்ரீ அருணகிரிநாதர்**

உருவாய் அருவாய் உளதாய் இலதாய்
மருவாய் மலராய் மணியாய் ஒலியாய்க்
கருவாய் உயிராய்க் கதியாய் விதியாய்க்
குருவாய் வருவாய் அருள்வாய் குகனே.

**வெள்ளிக்கிழமை - திருப்போரூர் சந்நிதிமுறை - ஸ்ரீ சிதம்பர சுவாமிகள்**

ஆறுமுகம் வாழி! ஆறிரண்டு தோள் வாழி!
தேறுபதம் வாழி! இரு தேவிமார் – வீறுபுடை
வாழி! வேல் வாழி! மயில் வாழி! போரூரர்
வாழி! **சகம் வாழி மகிழ்ந்து.**

**சனிக்கிழமை - கந்தபுராணம் - ஸ்ரீ கச்சியப்பர்**

துய்யதோர் மறைகளாலும் துதித்திடற்கு அரிய செவ்வேள்
செய்ய பேரடிகள் வாழ்க! சேவலும் மயிலும் வாழ்க!
வெய்ய சூர் மார்பு கீண்ட வேல் படை வாழ்க! **அன்னான்**
**பொய்இல் சீர் அடியார் வாழ்க! வாழ்க இப்புவனம் எல்லாம்!**

**கந்தன் கழலிணைகள் வெல்க!**

